# உங்கள் பால்காரர் ரயிலில் பால் கொண்டு தருவாரா?

என் பால்காரர் தருவார்.

பிரயாணத்தின் போது சாப்பாடு மற்றும் பானங்கள் விஷயத்தில் நீங்கள் மிகவும் கவனமாக இருக்க வேண்டும். பால் திரிந்து விடும் அல்லது விரைவில் புளித்துப் போய் விடும். இது போன்ற சமயங்களில் அமுல் மில்க் பவுடர் டின் கையோடு கொண்டு செல்லுங்கள்.

அமுல் மில்க் பவுடர் கொண்டு நீங்கள் தூய்மையான, ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா எது வேண்டுமோ தயாரிக்கலாம்.




## அமுல்
## மில்க் பவுடர்

**வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.**



விற்பனைக்கு விடுப்போர் : குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெடிங் ஃபெடரேஷன் லிட்., ஆனந்த் 388 001

OPERATION FLOOD

# கூட்டம் சேர்க்கத் தவறிய தி.மு.க.

குல்லா இல்லாத வி. பி. சிங்கைக் கண்டதும், பக்கத்தில் உட்கார்ந்திருந்த எட்டு வயதுப் பையன் தன் அம்மாவிடம், ''அம்மா, வி. பி. சிங் இவரா?'' என்று சந்தேகமாகக் கேட்டான். மேடையின் எதிர்ப்புறங்களில், 50 அடி உயரத்தில் குல்லா அணிந்து கொண்டு பேனரில் சிரித்துக் கொண்டிருந்தார் சிங். மேடைக்கு வந்தவர் திடீரென மாயமாக மறைந்துவிட்டார். அப்புறம் என்னவென்று விசாரித்தால், மேடையின் பின்புறத்தில் வைக்கப்பட்டிருந்த ஹாட்லைனில் டெல்லியுடன் பேசிவிட்டு வந்தாராம்.

மந்திரி உபேந்திரா பேசும் போது, 'அரசியலை விட்டு ஓடிவிடுவேன்' என்று ஜெயலலிதா அவ்வப்போது வெளியிடும் அறிவிப்பைக் கிண்டல் செய்து பேசினார். மாறன் அரசியல் மேடையில் பேசுவது, ரொம்ப மாதங்கள், (வருடங்கள்?) கழித்து இப்போதுதான். ''காங்கிரஸ் கட்சி ஒன்றுதான் நிலையான ஆட்சியைத் தரும் என்ற மூட நம்பிக்கையைத் தென்னக மக்கள் வைத்திருக்கிறார்கள்'' என்று மனம் நொந்து பேசினார்.

தேசிய முன்னணி ஆரம்பக் கூட்டம் மெரினாவில் நடந்த போது வந்த மக்களைக் குறிப்பிட்டு, ''அன்று வந்ததும் அதே நிலா; இன்று வந்ததும் அதே நிலா'' என்று கலைஞர் பேசிய போது கூட்டத்தில் மெல்லிய சிரிப்பு அலை பரவியது. ''வடநாடு முழுவதும் வெடித்த போபர்ஸ் பீரங்கிக் குண்டு, பாராளுமன்றத் தேர்தலின் போது, தமிழ்நாட்டில் வெடிக்கவில்லை. காரணம், மழை... குண்டு நமுத்துவிட்டது'' என்று தி. மு. க. தோல்வியைக் குறிப்பிட்டார் முதல்வர்.

'பிரதமர் பேச்சை மாநிலங்களவை உறுப்பினர் கோபால்சாமி மொழி பெயர்ப்பார்' என்று அன்பழகன் அறிவித்த போது பலத்த கைதட்டல். சிங் பேச்சில் பழைய வேகம் இல்லை என்பதை ஒப்புக் கொள்ள வேண்டும். பதவி, அவரது வாயைக் கட்டிப் போட்டிருக்கிறது. ரொம்ப ஜாக்கிரதையாகப் பேசினாலும், கிண்டலுக்குக் குறைவில்லை.

''சென்னை மாநகர வளர்ச்சிக்குப் பணம் கேட்டிருக்கிறார் முதல்வர். உங்கள் கைதட்டலைப் பெறுவதற்காக உறுதிமொழி வழங்க நான் தயாராக இல்லை. திட்டக் கமிஷனிடம் பேசிச் சென்னை மாநகரத்திற்கு அதிக நிதி வழங்குமாறு பார்த்துக் கொள்வேன். பழைய அரசு (ராஜீவ் அரசு) போல வாக்குறுதிகளை அள்ளி வழங்கி விட்டு செய்யாமல் இருப்பதைவிட, செய்துவிட்டு வந்து உங்களிடம் சொல்வதையே பெருமையாக நினைக்கிறேன்'' என்றார் கண்ணியமான வி. பி. சிங். பிரதமர் பேசும் போது போஃபர்ஸ் பற்றிக் குறிப்பிடாமல் போனது ஆச்சரியம்தான்.

மேடையில் அண்ணா, ஜெயப்பிரகாஷ் நாராயண் படங்கள் இருந்தன. தி.மு.க. கொடிகள் படபடத்துக் கொண்டிருந்தாலும், ஜனதா தளக் கொடியைத் தேட வேண்டியிருந்தது. பிரதமர் பேசும் போதும் சரி, கலைஞர் பேசும் போதும் சரி, கைதட்ட வேண்டிய பல சந்தர்ப்பங்களில் கூட்டம் அமைதியாகவே இருந்தது. பேச்சாளர்கள் கலைஞர் பெயரைக் குறிப்பிட்டால் பொதுவாகக் கைதட்டல் கேட்கும். அதெல்லாம் இந்தக் கூட்டத்தில் இல்லை. மேடையில் தலைவர்களிடையே இருந்த உற்சாகம் கூட்டத்தினரிடையே இல்லை.

''ராஜீவ் — ஜெயலலிதா கூட்டத்துக்கு ஆள் சேர்த்தாற்போல் இதற்கும் தி. மு. க. ஆட்களைத் திரட்டி இருக்க வேண்டும்'' என்று வருத்தத்துடன் குறிப்பிட்டார் ஜனதா தளத் தலைவர் ஒருவர். ''அந்தக் கூட்டம் பாய்ந்தோடி வந்த காட்டாறு. ஆனால் இந்தக் கூட்டம் கரைகளைத் தொட்டு ஓடும் அமைதியான நதி'' என்று சக பத்திரிகையாளர் வர்ணித்தார். சரியான உவமைதான்!

— தில்லப்பா

படம்: ராஜன்



• வாக்குறுதி கொடுப்பதா, வேண்டாமா? — வி. பி. சிங் யோசிக்கிறார்.

# பெண்களின் சக்தியை உணர்த்தும்

# மல்லிகா சாராபாய்

விஞ்ஞானி விக்ரம் சாராபாய் ஒரு கோரமான விமான விபத்தில் காலமான போது அவர் மகள் மல்லிகாவுக்குப் பதினேழு வயது. சகோதரன் கார்த்திக் உடனே வந்து சேர இயலாத நிலையில், தந்தையின் சடலத்துக்கு எரியூட்டி, இறுதிச் சடங்குகளைச் செய்தது மல்லிகா தான்! அவரைச் சந்தித்த போது, ''அதை ஒரு புரட்சியாகவே நான் கருதவில்லை; கார்த்திக் இங்கு இருந்திருந்தால்கூட நாங்கள் இருவரும் சேர்ந்துதான் இறுதிச் சடங்குகளைச் செய்திருப்போம்'' என்றார் மல்லிகா சாராபாய்.

''இப்படிப்பட்ட வித்தியாசமான மனப் போக்குக்குக் காரணம் நான் வளர்க்கப் பட்ட விதம்தான் — பதின்மூன்று வயதிருக்கும் எனக்கு... 'நீ சராசரி பெண் என்ற வட்டத்துக்குள் அடங்காமல் உனது தனித்தன்மையை நிலைநாட்ட விரும்பினால், உன் மனசாட்சியை மட்டுமே மதித்து நடக்கக் கற்றுக் கொள். மற்றவர்கள் என்ன சொல்வார்களோ என்று பயப்படாதே' என்று என் பெற்றோர்கள் எனக்கு அறிவுரை கூறினார்கள். அது அப்படியே பசுமரத்தாணியாக என் மனத்தில் இறங்கி விட்டது. எனக்குச் சரி என்று பட்டதைத் தயங்காமல் செய்யும் தார்மிக பலத்தை எனக்குத் தந்தது.

''நான் ஹிந்தி சினிமா உலகில் அடியெடுத்து வைக்க நினைத்த காலம் அது. இரு காட்சிகளுக்கு இடையே ஓய்வெடுத்துக் கொண்டிருந்தபோது,



டைரக்டர் வந்தார். 'அடுத்த காதல் காட்சிக்கு இந்தப் பெண்ணை 'வார்ம் அப்' செய்கிறாயா?'' என்று எனக்கு ஜோடியாக நடித்த ஹீரோ நடிகரைப் பார்த்துக் கண்ணடித்தபடி கேட்டார். எனக்கு வந்த கோபத்தில், விருட்டென்று எழுந்தேன். நான் உட்கார்ந்திருந்த நாற்காலியை அலாக்காகத் தூக்கி அந்த டைரக்டரின் தலையில் ஒரே போடாகப் போட்டுவிட்டு 'ஸெட்'டிலிருந்து வெளியேறினேன். அப்புறம் ஹிந்தி சினிமா உலகின் பக்கம் தலை வைத்துக் கூடப் படுக்கவில்லை.''

**து**ணிச்சல் மிக்க இந்தப் பெண்மணி கொஞ்சம் ஆடிப்போய் கண்கலங்கிய நேரமும் உண்டு.....

பீட்டர் ப்ருக் தயாரித்த ஃபிரெஞ்சு மகாபாரதத்தில் துரௌபதி வேடத்தை ஏற்க ஒப்புக்கொண்டார் மல்லிகா.

''நடனம், கலை, என்றால் ஆனந்தமும் மகிழ்ச்சியும் தரும் ஈடுபாடுகள் என்று தான் எண்ணியிருந்தேன். எனது இந்தக் கருத்துக்கு நேர் மாறாக மகாபாரத யூனிட்டில் கலை ஒரு முழு நேர, கடினமான வேலையாகவே கருதப் பட்டது. பொறுப்பு மிக்கப் பணியாக ஏற்கப்பட்டு ஒரு வேள்வி போல்தான் ஒவ்வொருநாளும் ஒத்திகை நடக்கும். மூன்று வாரக் கைக் குழந்தை ரேவந்தாவுடன் தைரியமாகக் கிளம்பி பாரிஸ் வந்துவிட்டேன். துணைக்கு வேறு யாரும் கிடையாது. அன்றாட வேலைகளைச் செய்து கொண்டு, குழந்தையையும் நானே கவனித்துக் கொண்டு, அவனுக்குப் பாலூட்டியபடியே ஃபிரெஞ்சு மொழி கற்றுக் கொண்டேன். குழந்தையைத் தூக்கிக் கொண்டு, ஒத்திகைகளுக்குப் போய்த் திண்டாடினேன். 'திரௌபதியைத் தவிர வேறெதிலும் நினைவுகூடச் செல்லக் கூடாது' என்று எதிர்பார்ப்பார் பீட்டர் ப்ருக்! எப்படி சத்தியம்? ஒத்திகையின் போது, 'எங்கே திரௌபதி' என்று தேடுவார்கள். 'குழந்தைக்குப் பாலூட்டும் நேரம்' என்று யாரேனும் ஒருவர் பதில் சொல்வார். நகுலன் எங்கே தொலைந்தான்?' என்று பரபரப்பாகத் தேடுவார்கள்.... 'மல்லிகாவின் குழந்தையைக் கொஞ்சிக் கொண்டிருக்கிறான்' என்று பதில் வரும்! இதற்கிடையில், மெட்ரோவில் (பாதாள ரயில்) பயணம் செய்கையில் கீழே விழுந்து எனக்குக் கணுக்கால் முறிவு ஏற்பட்டது.

''முடியாது! இனிமேல் தாக்கு பிடிக்கவே முடியாது. நான் இந்தியாவுக்குத் திரும்பப் போகிறேன் என்று போனில் அம்மாவிடமும் கணவரிடமும்' அழுதேன். அவர்கள் கொடுத்த தைரியம் மட்டும் இல்லாதிருந்திருந்தால் 'திரௌபதிக்கு' ஒரு முழுக்குப் போட்டுவிட்டு இந்தியாவுக்கு ஓடி வந்திருப்பேன்'' என்றார் மல்லிகா சாராபாய்.

'உன்னையே இழந்த பின்னர் என்னைப் பணயம் வைக்க உனக்கு என்ன உரிமை இருக்கிறது?' என்று தர்மனைத் தட்டிக்கேட்ட திரௌபதியைப் பெண்ணுரிமைப் போராளிகளின் முன்னோடி என்று கருதுகிறார் மல்லிகா. 'இத்தகைய திரௌபதியின் தேசத்திலா வரதட்சணைக் கொலைகள்?' என்று அயல் நாட்டினர் வியந்து போகிறார்களாம்.

''எப்போதும் நாயகனுக்காக ஏங்கிக் கொண்டிருக்கும் நாயகிகளைச் சித்திரிப்பதில் எனக்கு உடன்பாடில்லை'' என்று சிறத்துடன் சொன்ன மல்லிகா சமீபத்தில் 'சக்தி' என்ற நாட்டிய நிகழ்ச்சியை அரங்கேற்றினார். பரதம், குச்சுபிடி, கதகளி என்று பலவகை நாட்டிய பாணிகளையும் கையாண்டு பாஞ்சாலியையும் சாவித்ரியையும் புதிய கோணத்தில் சித்திரித்தார். வரதட்சணைக் கொடுமை காரணமாக டெல்லியில் தற்கொலை செய்து கொண்ட நான்கு சகோதரிகளையும், 'சிப்கோ' இயக்கத்தின் முன்னோடியாக விளங்கிய அம்ருதா தேவியையும் கூட இந்த நிகழ்ச்சியில் சித்திரித்தார்.

**க**லைத் திறனில் ஜொலிக்கும் மல்லிகா, எம்.பி.ஏ. முடித்து, டாக்டர் பட்டமும் பெற்று அறிவாற்றலிலும் சுடர் விடுகிறார்.

''என்னைவிட என் கணவர் நன்றாகச் சமைப்பார். நான் நன்றாகப் பாத்திரங்கள் துலக்குவேன்,'' என்று சகஜமாகப் பேசிய மல்லிகா சாராபாயின் இல்லத்தில் இன்ன வேலையை இன்னார்தான் செய்ய வேண்டும் என்ற பாகுபாடே கிடையாதாம். வீட்டு வேலைகள் எல்லோருக்கும் பொது. இந்தச் சூழலில் வாழும் அவர் மகன் ரேவந்தா ஒரு நாள் கேட்டான்: ''ஏன் அம்மா! அப்பா திரௌபதியாக நடிக்கக் கூடாதா?''

''நடிக்கலாம் கண்ணா! ஆனால் உன் அப்பாவுக்கு என்னைப் போல் நீண்ட கூந்தல் இல்லையே!'' என்று பதில் கூறினார் மல்லிகா சாராபாய்.

சந்திப்பு: **நிர்மலா சக்கரவர்த்தி**

படம்: **யோகா**

# அசத்துவாரா அஸருத்தீன்?



**அ**ஸருத்தீன் கிரிக்கெட் ரசிகர்களை அசத்தப் போகிறாரா அல்லது 'அடி' வாங்கித் திரும்பப் போகிறாரா என்று ஒருபுறம் நாம் குழம்புவதிருக்கட்டும்... அஸருத்தீனே அசந்து போய்த்தானிருக்கிறார்! ''எல்லா ஆட்டக்காரர்களையும் போல, ஒருநாள் காப்டனாக வேண்டும் என்ற ஆசை என்னுள் இருக்கத்தான் செய்தது. ஆனால் அந்த ஆசை இத்தனை சீக்கிரம் நிறைவேறும் என்று நான் துளிக்கூட எதிர்பார்க்கவில்லை'' என்று ஒரு பத்திரிகை பேட்டியில் கூறியுள்ளார் புதிய காப்டன்.

பள்ளி, கல்லூரி, பல்கலைக்கழக, ரஞ்சி அளவில் கிரிக்கெட் பந்தயங்களில் பங்கேற்றுப் படிப்படியாக முன்னேறிய அனுபவம் அஸருத்தீனுக்குக் கைகொடுக்கத்தான் செய்யும் என்றாலும் இவற்றுள் எந்த நிலையிலும் அவர் காப்டனாகப் பணியாற்றியதேயில்லை என்று அறியும் போது, திடுதிப்பென்று குருவி தலையில் பனங்காயைத் தூக்கி வைத்து விட்டார்களோ என்று கிரிக்கெட் ரசிகர்கள் சந்தேகத்துடன் கேட்கிறார்கள்.

அஸருத்தீனோ ''எதையும் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற ஆர்வம் எனக்கு உண்டு. அதோடு கொடுத்த எந்தப் பணியையும் எனது முழு முயற்சியையும் பிரயோகித்துச் செய்யும் பழக்கமும் உண்டு. இவற்றுடன் எனது ஐந்தாண்டு கால 'டெஸ்ட்' அனுபவமும் இணைந்து நியூஜிலாந்து சுற்றுப் பயணத்தின் போது கை கொடுக்கும் என்று நம்புகிறேன்'' என்று சொல்லியிருக்கிறார்.

**அ**ஸருத்தீனுடைய தாத்தா மட்டும் இன்று உயிரோடிருந்திருந்தால், தமது பேரனைக் காட்டிலும் அதிக மகிழ்ச்சியடைந்திருப்பார். காரணம், 'அஜ்ஜு' (அஸருத்தீனின் செல்லப் பெயர்) ஒரு முழுமையான கிரிக்கெட் வீரராக உருவானதில் தாத்தாவின் பங்குதான் மிக முக்கியமானது.

பள்ளி நாட்களில் அஜ்ஜு வகுப்பை 'கட்' அடித்து விட்டு கிரிக்கெட் மாட்சுகளைப் பார்க்கப் போன போது, அவரது ஆர்வத்தைப் புரிந்து கொண்டு, அவரைக் கடிந்து கொள்ளாமல் இருந்ததோடு மாட்சுக்கு 'டிக்கெட்' வாங்கப் பணம் இருக்கிறதா என்று பரிவுடன் கேட்பாராம் தாத்தா! கிரிக்கெட் நிமித்தம் வெளியூர் போனால், தவறா

* 'தௌசண்ட்' ருதீன்: ரன்கள் குவியட்டும்!

மல் ஏர்போர்ட் அல்லது ஸ்டேஷனுக்குச் சென்று வாழ்த்தி வழியனுப்புவாராம். அதே சமயம் பரீட்சை நேரங்களில் 'பள்ளி ஹெட் மாஸ்டரே மேல்' என்று சொல்லக் கூடிய அளவுக்குக் கண்டிப்புக் காட்டி அஜாவைப் படிக்க வைப்பாராம். பாடங்களைச் சொல்லித் தருவாராம்.

தந்தை அசிகதின், தமது மகன் அஜா ஒரு டாக்டராகவோ, பைலட்டாகவோ, இஞ்ஜினியராகவோ வர வேண்டும் என்று ஆசைப்பட்டபோதிலும், அவன் கிரிக்கெட்டில் காட்டிய ஆர்வத்தைப் பார்த்து 'இவன் கிரிக்கெட் மூலம்தான் புகழடையப் போகிறான்' என்று மனத்தைத் தேற்றிக் கொண்டு விட்டாராம்.

— அவர் கூறுகிறார்: "அஜா தனது முதல் டெஸ்டில் ஆடிக் கொண்டிருந்தான். கான்பூரிலிருந்து நேரடி ஒளிபரப்பாக அந்த மாட்சை நாங்கள் எங்கள் வீட்டு பிளாக் அண்ட் ஒயிட் டீ.வி.யில் பார்த்துக் கொண்டிருந்தோம். அன்று ஆட்ட முடிவில் அஜா 98 நாட் அவுட்! அன்றிரவு முழுதும் மகன் செஞ்சுரி அடிக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்வதிலேயே கழிந்தது. மறுநாள் மீண்டும் டீ.வி. முன்னிலையில் அமர்ந்த போது ஏக டென்ஷன். நூறாவது ரன்னை எடுத்த போது மகிழ்ச்சியில் திக்குமுக்காடிப் போனோம். அதற்குப் பிறகுதான் இயல்பாக மூச்சே விட முடிந்தது! தொடர்ந்து தனது முதல் மூன்று டெஸ்டுகளிலும் அஜா செஞ்சுரிகள் எடுத்ததையொட்டி, ஏழைகளுக்கு அன்னதானம் செய்து ஆண்டவனுக்கு நன்றி செலுத்தினோம். அவனுக்கு மேலும் பல வெற்றிகள் கிட்ட வேண்டிக் கொண்டோம்."

இரண்டாண்டுகளுக்கு முன் அஸருத்தீனுக்குத் திருமணம் நடந்தது. திருமணம் தமக்கு நிரம்ப அதிர்ஷ்டத்தைக் கொண்டு வந்துள்ளதாகக் கருதும் அவர், "மனைவி என்று ஒருத்தி இருந்து, அவளுடன் சந்தோஷத்தையும் சோகத்தையும் பகிர்ந்து கொள்ளுவதே ஓர் இனிய அனுபவம்தான்



• காவஸ்கர்: "மிக நம்பகமான ஃபீல்டர்."



• ஸ்ரீகாந்த்: "ஒழுக்கமும் கட்டுப்பாடும் மிக்கவர்."
• படம்: ரமணன்

என்கிறார். இத்தனைக்கும் அவர் மனைவிக்குக் கிரிக்கெட்டில் ஆர்வமே கிடையாதாம்!

அஸருத்தீனின் ஆட்டத்திறனை அவருக்குக் காப்டனாக இருந்த இரு ஆட்டக்காரர்கள் மிகவும் சிலாகித்துக் கூறியுள்ளனர்:

சுனில் காவஸ்கர் தமது கட்டுரை ஒன்றில் 'அஸர் ஒருமுறை கூட அசிரத்தையாய்க் காட்சுகளைத் தவற விட்டதில்லை. என் அனுபவத்தில் நான் சந்தித்த மிக நம்பகமான ஃபீல்டர்களுள் ஒருவன் அவன். சிறந்த பாட்ஸ்மன் என்பதோடு விக்கெட்டுகளுக்கு இடையே மிகச் சுறுசுறுப்பாக ஓடி ரன்களைக் குவிப்பதிலும் வல்லவன்' என்று குறிப்பிட்டிருக்கிறார்.

"அஸருத்தீன் ஒழுக்கமும் கட்டுப்பாடும் மிகுந்த ஆட்டக்காரர்" என்கிறார் ஸ்ரீகாந்த். "தினமும் அதிகாலையிலேயே எழுந்து ஓட்டம், உடற்பயிற்சி என்று 'பிஸி'யாகி விடுவார். உணவு விஷயத்தில் மிகுந்த கட்டுப்பாடுடன் இருப்பார். பார்ட்டிகளுக்குப் போனால் பழரசமோ கூல்டிரிங்கோ தான் அருந்துவார். இரவு வெகு நேரம் கண் விழிக்கப் பிடிக்காது அவருக்கு. 'எப்போடா பார்ட்டி முடியும், போய்ப் படுக்கலாம்' என்று பொறுமையின்றித் தவிப்பார். ரூமில் இருந்தால் எட்டு, எட்டரைக்குத் தூங்கிப் போய் விடுவார்! மிகவும் அமைதியானவர். பெண் விசிறிகளைக் கண்டால் அவருக்கு 'அலர்ஜி'. அவருடைய முதல் மூன்று டெஸ்டுகளின் போதும் சரி, ஷார்ஜாவில் அவர் அமர்க்களமாய் ஆடின போதும் சரி, அவர் 'ரூம் மேட்' ஆக இருந்த எனக்கு அவருக்கு வந்த 'போன் கால்களு'க்குப் பதில் சொல்லியே 'பெண்டு' நிமிர்ந்து விட்டது! 'டெலிபோன் தொல்லையை நீயே சமாளி' என்று கூறி விட்டு மனுஷன் நிம்மதியாகத் தூங்கி விடுவார். நள்ளிரவு வரை போன் ஓயாது!

"ரம்ஜான் சமயத்தில் மேட்ச் தினங்கள் தவிர மற்ற எல்லா நாட்களும் நோன்பு இருப்பார். தினமும் ஐந்து முறை தவறாமல் தொழுகை செய்வார். மைதானத்தில் இருந்



## வில்லியின் சீடர்

"கிரிக்கெட்டில் அறுபது சதவிகிதம் வேலை மூளைக்குத்தான். மீதி நாற்பது சதவிகிதம் தான் உடல்ரீதியான திறமை" என்கிறார் விவேக் ராஸ்தான். சென்னை விவேகானந்தா கல்லூரியில் இரண்டாம் ஆண்டு பி.காம் பயிலும் இந்த ஆறடிக்கும் அதிக உயரமான கிரிக்கெட் வீரர், உலகப் புகழ் டென்னிஸ் வில்லியின் மேற்பார்வையில் உருவான வேகப் பந்து வீச்சாளர். "நாம் வீசும் ஒரு சில பந்துகளை ஆடியவுடமே பாட்ஸ்மன் நமது ஆற்றலைக் கணித்து விடுவார். எனவே அவரைத் தவறு செய்ய வைக்க வேண்டும். இதிலேதான் நமக்கு மூளைக்கு வேலை!" என்கிறார் ராஸ்தான். சியால்கோட்டில் அதி புத்திசாலித்தனமாகப் பந்து வீசி, சலீம் மாலிக்கை இவர் வீழ்த்தியதைச் சுலபத்தில் மறக்க முடியாது.

நியூஜிலாந்துக்குப் புறப்படும் முன், இவர் சென்னை வந்து, எம்.ஆர்.எஃப் ஃபவுண்டேஷனைச் சேர்ந்த டி.ஏ. சேகரைச் சந்தித்து, நமது பந்து வீச்சில் நமக்கே தெரிந்த ஒரு சிறு குறையை ஒப்புக்கொண்டு அதை எப்படி நிவர்த்தி செய்து கொள்வது என்று கலந்தாலோசித்தார். அதோடு, சென்ற ஆண்டு நியூஜிலாந்து சென்று திரும்பிய பத்தொன்பது வயதுக்குட்பட்டவர்கள் அணியினரையும் சந்தித்து அந்நாட்டு விக்கெட்டுகள் மற்றும் சீதோஷ்ண நிலை பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டார். இத்தனை ஈடுபாடு பயன்தராமலா போய்விடும்? பார்ப்போம்!

**நன்றி: ஹிந்துஸ்தான் டைம்ஸ்.**

தால் தொழ முடியாது. மற்ற நேரங்களில் எவ்வளவு 'பிஸி'யாக இருந்தாலும் தனி இடம் தேடிப் போய்த் தொழுது விட்டு வருவார்" என்கிறார் ஸ்ரீகாந்த்.

**ப**த்திரிகையாளர்கள் வட்டத்தில் அஸருத்தீனுக்கு வைக்கப்பட்டுள்ள செல்லப் பெயர் 'தௌசண்ட்ருத்தீன்'! காவஸ்கருக்கு 'காஸி' என்றும் கபிலுக்குக் 'காப்ஸி' என்றும் ஸ்ரீகாந்துக்கு 'சிக்கா' என்றும் வெங்சர்க்காருக்குச் 'சோட்டே நவாப்' என்றும் 'செல்ல'ப் பெயர்களைப் பத்திரிகையாளர்கள் வைத்துள்ளதை அறிந்து, தமக்கும் ஒரு பெயர் வைக்கும்படி வலியச் சென்று அவர்களைக் கேட்டார் அஸர். அதன்படி அவருக்கு வைக்கப்பட்ட பெயர்தான் 'தௌசண்ட்ருத்தீன்'. ஹிந்தியில் 'ஹசார்' என்றால் ஆயிரம் (தௌசண்ட்). தௌசண்ட்ருத்தீன் ஆயிரக் கணக்கான ரன்களைக் குவிக்கட்டும். நமது ஆட்டத்தாலும் திறமையான தலைமையாலும் இந்தியாவுக்குப் பல வெற்றிகளைத் தேடித் தரட்டும் என்று வாழ்த்துவோம்.

**— எஸ். சந்திரமௌலி.**

மேலட்டை வண்ணப்படம் மற்றும் படங்கள்: **கே. என். சாரி.**







— லட்சுமி ஆவுடைநாயகம்.

# இந்தியன் பாங்க் அறிமுகப்படுத்தும் திட்டங்கள் - இவை உங்கள் கனவுகளை நனவாக்கிட உதவும்:




REGULAR MONTHLY INCOME

**சுவர்ண புஷ்பா**

**நிரந்தர மாத வருமான திட்டம்**




EQUITY GROWTH FUND

**இந்த் ரத்னா**

**ஈக்விட்டி வளர்ச்சி நிதி**

| சுவர்ண புஷ்பா | இந்த் ரத்னா |
|---|---|
| • உறுதியளிக்கப்பட்ட வருமானம் பெற இரண்டு வழிகள்<br>I. ஆண்டுக்கு 12.68 சதவிகித வட்டி வீதம் ஆண்டுக்கு ஒருமுறை பெறுதல் அல்லது.<br>II. ஆண்டுக்கு 12 சதவீதம் வட்டி மாதம் ஒருமுறை பெறக்கூடிய வாரண்டுகள் முன்கூட்டியே பெறுதல்.<br>• திட்ட காலம் 5-6 ஆண்டுகள் | • மூலதன மதிப்பு உயர்வு<br>• திட்ட காலம் — 5-6 ஆண்டுகள்.<br>• விடாப்பற்று லாயல்ட்டி டிவிடெண்டு.<br>• பம்பாய், சென்னை ஸ்டாக் எக்ஸ்சேன்ஜ்களில் அட்டவணைப்படல் வசதி. |

• முதலீடு செய்த தொகையில் 75 சதவிகிதம் வரை கடன் வசதி. • ஓராண்டுக்குப் பிறகு முதலீடு தொகையை திரும்ப வாங்கும் வசதி. • எளிதில் பெயர்மாற்றம் பெறத் தக்கவை.

• குறைந்தபட்ச முதலீட்டு தொகை ரூ.1000. • வரி விலக்கு வசதி — வருமான வரிச் சட்டம் பிரிவு 80(L): மற்றும் சொத்து வரிச் சட்டம் பிரிவு 5, உட்பிரிவு (IA) ஆகிய வற்றின் கீழ்.



**இந்தியன் பாங்க்**
**பரஸ்பர நிதி**

பொறுப்பாளர்: இந்தியன் பாங்க்
கார்ப்பரேட் அலுவலகம்: 1வது மாடி,
100/104 நானக் மோட்வானி மார்க்,
டி ஜி. சேம்பர்ஸ், ஃபோர்ட், பம்பாய்-400 023

இஷ்யு வெளியீட்டுக்கான வர்த்தக வங்கியாளர்கள்;

**இந்த்பாங்க்**

இந்த் பாங்க் மர்ச்சென்ட் பாங்கிங் சர்வீசஸ் லிட்.
(இந்தியன் பாங்கின் முழு உடைமையில் உள்ளது)
கார்ப்பரேட் அலுவலகம்:
17வது மாடி, மேக்கர் டவர்ஸ் F,
கஃப் பரேடு, பம்பாய்-400 005

Mudra:B:IB:400:1711:TM

# சீனியர் ஆட்டக்காரர்களைக் கழித்துக் கட்டியது சரியா?

## "ஹிந்து" நாளிதழின் கிரிக்கெட் விமர்சகர் மோகனுடன் ஒரு பேட்டி:

நிருபர்: சீனியர் ஆட்டக்காரர்களை எல்லாம் இப்படி ஒட்டுமொத்தமாய் நீக்கியது சரியா?

மோகன்: இது ஒரு பழிவாங்கும் நடவடிக்கைதான் என்பதில் சந்தேகமில்லை. சீனியர் ஆட்டக்காரர்கள் எல்லோரும் இன்னும் சில வருடங்களில் தாமாகவே விலகியிருப்பார்கள். இப்படி ஒரு கடுமையான நடவடிக்கைக்கு அவசியமே இருந்திருக்காது. அவர்களை நீக்கித்தான் ஆக வேண்டுமென்றால் அதையும் நாசூக்காகச் செய்திருக்கலாமே! பாதி சீசனில், கேப்டன் மற்றும் ஆட்டக்காரர்களை மாற்றாமல் இந்த சீசன் முடியும் வரை பொறுத்திருந்து, அடுத்த சீசனுக்குப் புதியவர்களைச் சேர்த்திருக்கலாம்.

நிருபர்: புதிய அணி, 'தொண்ணூறுகளின் அணி' எனக் குறிப்பிடப்படுவது குறித்து?

மோகன்: 1990ன் அணி என்று வேண்டுமானால் சொல்லலாம்!

நிருபர்: ஸ்ரீகாந்தின் கேப்டன்சி எப்படி?

மோகன்: ஸ்ரீகாந்த், தாம் நல்ல ஆட்டக்காரர் மட்டுமின்றி நல்ல கேப்டனும் கூட என நிரூபித்திருக்கிறார். தகுதி அடிப்படையில் பார்த்தால் அவர் கேப்டனாகவே தொடர்ந்திருக்க வேண்டும்.

நிருபர்: அஸாருத்தீனின் தலைமை பற்றி...

மோகன்: நல்ல ஆட்டக்காரர். சக ஆட்டக்காரர்களுடன் சகஜமாய்ப் பழகுபவர்; அமைதியான சுபாவம் கொண்டவர். மற்றவர்களுடன் அட்ஜஸ்ட் செய்து கொண்டு ஆடுபவர். கொஞ்சம் அனுபவக் குறைவு என்பது தவிர கேப்டன் பதவிக்குத் தகுதியானவர்தான்.

நிருபர்: கபில் போன்ற சீனியர் ஆட்டக்காரர்களை அவரால் கட்டுப்படுத்தி வேலை வாங்க முடியுமா?

மோகன்: கபில், தம்மை விட இளைய ஆட்டக்காரர்களின் தலைமையில் ஆடுவது இது முதல் தடவை இல்லையே! ரவி சாஸ்திரி, வெங்சர்க்கார், ஸ்ரீகாந்த் இவர்கள் எல்லாருமே கபிலுக்கு ஜூனியர்கள்தானே? அணியின் நலனுக்காக ஆடும் ஆட்டக்காரர் கபில். எனவே அவர் ஒரு பிரச்னையே இல்லை.

நிருபர்: அதிக ஊதியம் போன்ற காரணங்களுக்காக சீனியர்கள் நடத்திய போராட்டத்தை அஸாருத்தீன் தொடருவாரா?

மோகன்: மாட்டார். ஆனால் ஒரு விஷயம். இப்போதுள்ள ஆட்டக்காரர்கள் புதியவர்கள் என்பதால் இப்போதைக்கு வாயை மூடிக் கொண்டிருப்பார்கள். ஆனால் இன்னும் சில ஆண்டுகளில் இவர்கள் ஸ்டார் வால்யூ அதிகரித்து விட்டால் மறுபடியும் இதே பிரச்னை எழத்தானே செய்யும்?



மோகன்

நிருபர்: நியூஜிலாந்தில் நம் அணியின் ஆட்டம் எப்படி இருக்கும்?

மோகன்: பாகிஸ்தான்; மேற்கு இந்திய அணிகள் போல நியூஜிலாந்து அணி மிகப் பலமானது அல்ல. என்றாலும் கூட, நிச்சயம் நம் அணியை விட வலுவானதுதான். எனவே சுலபமாய் வெற்றி பெறுவது சாத்தியமில்லை. ஆனால் ஒன்று; புதிய அணி வெற்றி பெற்றால் போர்டு, "புதிய அணியின் சாதனையைப் பார்த்தீர்களா?" என்று கூறும். தோற்றுப் போனாலோ, "அதனால் என்ன, இளைஞர்கள்தானே, போகப் போகப் பாருங்கள்" என்று சொல்லும்!

— மௌஷ்மி

## பாகிஸ்தான் டூர் ராசி

பாகிஸ்தான் டூருக்கும் இந்திய அணி காப்டன்களுக்கும் ஒத்து வருவதில்லை. இதுவரை இந்திய அணியின் நான்கு காப்டன்கள் பாக். டூர் முடிந்த கையோடு பதவி இறக்கம் செய்யப்பட்டனர். பட்டியல்: வினுமன்கட், பிஷன் சிங் பேடி, கவில் காவஸ்கர், ஸ்ரீகாந்த். காப்டன் பதவி இழந்த காவஸ்கர், மறுபடியும் கேப்டனாக நியமிக்கப்பட்டார். அப்போது இந்திய அணி பாகிஸ்தான் டூர் செல்ல, இந்திரா காந்தி மரணம் காரணமாய்ப் பாதியிலேயே இந்தியா திரும்ப நேர்ந்தது! பாகிஸ்தான் டூர் ராசி போலிருக்கிறது இது.

— ஜூலி

## ஹரியானாவில் ஓர் அநியாயம்!

# விவசாயிக்கு உதவ அவன் வயிற்றில் அடி!




ஹரியானாவில் ஒரு டிஸ்னி லாண்டை உருவாக்கப் போகிறாராம் முதலமைச்சர் ஓம் பிரகாஷ் சௌதாலா! டெல்லி—ஹரியானா எல்லையில் அமைய இருக்கும் இந்தக் கேளிக்கைப் பூங்காவுக்கு 28,000 ஏக்கர் விவசாய விளை நிலத்தை ஆர்ஜிதப் படுத்துவதில் முனைந்துள்ளது ஹரியானா அரசாங்கம். இதன் பயனாகச் சுமார் 1.5 லட்சம் விவசாயிகள், தங்கள் வம்ச பரம்பரையான விளை நிலத்தை இழப்பதோடு, தங்கள் வாழ்விடங்களிலிருந்து வேரறுக்கப்பட்டு இடம்பெயர்வார்கள்.

கேளிக்கைப் பூங்காவின் விஸ்தீரணம் இருநூறு ஏக்கர்களுக்குள்தான் இருக்கும். ஆனால் அதைக் காட்டிலும் 150 மடங்கு நிலம் ஆர்ஜிதப்படுத்தப்படுவதற்குக் காரணம் இல்லாமல் போகுமா? இந்த ஆர்ஜிதத்தால், நில வேட்டையாடிக் கொண்டிருக்கும் பல டெல்லி பணக்காரர்கள் பயன் அடைவார்கள் என்று நம்ப இடமிருக்கிறது. கூடவே சில பல அரசியல்வாதிகளும் ஆதாயம் பெற வாய்ப்பிருக்கிறது. வளமான விவசாய விளை நிலங்கள் தவிர பாதுகாக்கப்பட்ட காடுகள் கூட கான்க்ரீட் குடியிருப்புகளாக மாறி விடும் அபாயம் இப்போது ஹரியானாவை அச்சுறுத்திக் கொண்டிருக்கிறது.

ஒவ்வொரு ஏக்கரும் பன்னிரண்டு லட்சம் ரூபாய் பெறுமானமுள்ளதென மதிப்பிடப்பட்டுள்ள நிலத்தை, ஒரு லட்சம் ரூபாய்க்கும் குறைவான நஷ்ட ஈடு கொடுத்துக் கையகப்படுத்துவதன் மூலம் ஏழை விவசாயிகளின் வயிற்றில் அடித்து வருகிறது ஹரியானா அரசாங்கம்.

டெல்லியைச் சுற்றிலும் வசிக்கும் சில பணக்கார எஸ்டேட் முதலாளிகள் தங்கள் எஸ்டேட்களின் எல்லையை விஸ்தரிக்க விரும்பி, இந்த ஏழை விவசாயிகளின் நிலத்தை நிறையப் பணம் கொடுத்து வாங்கத் தயாராய் இருந்த போது, தலைமுறையாகத் தாங்கள் உழுது வரும் பூமியைத் தர மறுத்தனர் இந்த விவசாயிகள். இப்போது அந்த விலையைக் காட்டிலும் பல மடங்கு குறைந்த விலைக்குத் தங்கள் நிலத்தை அரசாங்கத்துக்கு விட்டுக் கொடுக்க வேண்டியுள்ளதே என்று தங்கள் விதியை நொந்து கொள்கிறார்களாம் இவர்கள்.

விவசாயக் கடன்களை ரத்து செய்வதாக வாக்களித்து விட்டு அதனால் விளையும் நஷ்டத்தை ஈடுசெய்ய முடியாமல் திணறிக் கொண்டிருக்கும் ஹரியானா அரசாங்கம், இந்த நவீன கேளிக்கைப் பூங்காவுக்கு நிலம் வாங்க மட்டும் 280 கோடி ரூபாய் செலவிடும்!

கிராமப்புற வளர்ச்சிக்காக மொத்த செலவில் ஐம்பது சதவிகிதத்தை ஒதுக்குவதாகத் தேர்தல் வாக்குறுதி அளித்தது தேசிய முன்னணி. முன்னணியில் அங்கம் வகிக்கும் பிரதான கட்சியான ஜனதா தள ஆட்சியில்தான், ஹரியானா மாநிலத்தில் கேளிக்கை பூங்காவுக்கென பல கோடி செலவில் விளையாட்டுச் சாதனங்கள் இறக்குமதி செய்யப்படவிருக்கிறது!

மத்திய தேசிய முன்னணி அரசின் சிக்கன நடவடிக்கை முழக்கத்துக்கு முற்றிலும் மாறான இந்த நடவடிக்கை விவசாய அமைச்சரும் துணைப் பிரதமரும் ஹரியானா 'பிதா' மகருமான தேவிலாலின் 'ஆசி'களுடன்தான் நடக்கிறது என்று எவ்வாறு நம்பாமல் இருக்க முடியும்?

தங்கள் இருப்பிடங்களிலிருந்து பெயர்த்து எறியப்படுவதை எதிர்த்து 'டம்டமா' என்ற ஹரியானா கிராமத்து மக்கள், ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தியுள்ளார்கள்.

இந்த 'விளையாட்டுப் பூங்கா' திட்டம் வினையாக முடிவதற்கு முன், பிரதமர் குறுக்கிட்டுத் தடை விதிக்கா விட்டால் தேசிய முன்னணியின் பெயர் 'ரிப்பேர்' ஆகப் போவது நிச்சயம்!

நன்றி: **ஹிந்துஸ்தான் டைம்ஸ்.**


முதல்ல வாலை நுழைச்சுப் பார்ப்போம்... அப்புறம் தலையை விடலாம்!
பாகிஸ்தான்
கவலைப் படாதீங்க, ஒட்ட நறுக்கிடுவோம்!
கோர்பசேவ்
காஷ்மீர் பிரச்னையில் இந்தியாவுக்கு ஆதரவு
வி.பி.சிங்


தமிழக சட்ட மன்றத் தேர்தல்
கருணாநிதி
நாடாளு மன்றத் தேர்தல்
புதுவை சட்ட மன்றத் தேர்தல்?

காஷ்மீர் பிரச்னை
இப்பதானே அம்மா உள்ளே வந்திருக்கேன்? அவாளவாளுக்குப் பிடிச்ச டிபனா பண்ணித் தர்றேன். பொறுமையா, சமர்த்தா இருங்கோ. பார்க்கலாம்!
வி.பி.சிங்
ராமஜன்ம பூமி பிரச்னை
இலங்கை பிரச்னை
பஞ்சாப் பிரச்னை



# கல்கி

1990 பிப்ரவரி 11
மலர் 48 இதழ் 28
சுக்ல தை 29



## இலவச அரசியல்!

கனடா நாட்டில் பனிச் சறுக்கு விளையாட்டில் ஈடுபட்ட இருவர், குறிப்பிட்ட பாதுகாப்பான எல்லைகளைக் கடந்து செல்லவே காணாமல் போனார்கள்! அவர்களைக் கண்டுபிடித்து மீட்டு வரப் புறப்பட்டவர்கள், வெகுநேரம் தேடி அவர்களை நெருங்கிய போது, கடுமையான வெண் பனியில் சிக்கிச் சாகாமல் இருக்க அவர்கள் தங்களிடம் இருந்த டாலர் நோட்டுக்களை சிகரெட் லைட்டர் உதவியுடன் எரித்துக் குளிர் காய்ந்து கொண்டிருப்பதைக் கண்டார்கள்!

நம் நாட்டிலும் ரூபாய் நோட்டுக்களை எரிப்பவர்கள் உண்டு! காணாமல் போன கனேடியர் உயிர் வாழ டாலர் நோட்டுக்களை எரித்தார்கள் எனில், இவர்களோ பதவியில் நீடிக்க ரூபாய் நோட்டுக்களை எரிக்கிறார்கள்! கனேடியர் எரித்தது தங்கள் சொந்தப் பணம்; நமது அரசியல்வாதிகள் எரிப்பது மக்களின் வரிப் பணம்!

இலவசங்கள், கடன் தள்ளுபடி, லோன்மேளா போன்ற எல்லாமே இப்படி மக்களின் செல்வத்தை அழிப்பதற்குச் சமமானதுதான். காங்கிரஸ் ஆட்சி, தேசிய முன்னணி அரசு, தி. மு. க. ஆட்சி என்று எல்லாருமே இந்தப் பொருளாதாரக் குற்றத்தைச் செய்து வருகின்றனர். எப்படியெனில் இவர்கள் தங்கள் சொந்தப் பணத்தை இதற்கெல்லாம் செலவிட்டு விடுவதில்லை. மக்களின் வரிப்பணம்தான் இந்தச் செலவினங்களை ஈடுகட்டுகிறது. ஒரு தீப்பெட்டி, ஒரு புட்டி கெரசின், ஒரு மேல்துண்டு என்று எதை வாங்கினாலும் அதிலே மறைமுக வரிகள் உள்ளன. மறைமுக வரிகள்தாம் அரசுக்கு மிக அதிகமான வருவாயைத் தேடித் தருகின்றன. இந்த வரிகள்தாம் இலவசம் என்ற பெயரில் பொருளாகத் திரும்பி வருகின்றன.

பணக்காரர்களுக்கு வரி விதித்து ஏழைகளுக்குத் தருவதாகக் கூறுவதும் மாயையே. வரி விதிப்பினால் எந்தப் பணக்காரனும் ஏழையாகிவிட மாட்டான். அவன் மேன்மேலும் பணக்காரனாவான். தன் மீது விதிக்கப்படும் வரி பளுவை அவன் சாமர்த்தியமாக, சுற்றி வளைத்து ஏழை மீதே சுமத்தி விடுவான்! 'மலை உச்சியில் மழை பெய்தாலும் அது கடைசியில் அடிவாரத்துக்குத்தான் வந்து சேரும்' என்று பொருளாதார வல்லுனர்கள் இதற்கு உவமை கூறுவார்கள்!

எனவே மறைமுக வரியானாலும், நேர்முக வரியானாலும் வரி விதிப்பு என்பது கருணையோடு கைகோத்து நடக்க வேண்டும். இவ்வாறு வசூலிக்கப்படும் வரி, சிக்கனமாகச் செலவிடப்பட வேண்டும்; நிரம்பட முதலீடாகி, தொழில்கள் பெருகவும், வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்கவும் வழி வகுக்க வேண்டும். நாட்டின் பொருளாதார மேம்பாடுதான் ஏழைமையை ஒழிக்கும், இலவசங்கள் அல்ல.

ஆயிரம் ரூபாய் சம்பாதிப்பவருக்கும் இலவச அரிசி என்று அறிவித்துள்ளது தமிழக அரசு. 'மாதத்துக்கு 45,000 டன் போதாது; 55,000 டன்னாக உயர்த்துங்கள்' என்று மத்திய அரசிடம் அரிசிப் பிச்சை கேட்டுக் கொண்டிருக்கும் நிலையில், இப்படி இலவச விநியோகம் நடத்துவது நியாயம்தானா என்ற கேள்வி ஒருபுறமிருக்க, 'இதற்கு ஆகப்போகும் செலவு எவ்வளவு கோடி? அதனைத் தரப்போவது யார்?' என்று பார்த்தால் ஆயிரம் ரூபாயும் அதற்குக் குறைவாகவும் சம்பாதிப்பவர்கள்தாம் மிக அதிகமாக இருப்பார்கள்! ஆக, இதில் இலவசம் எங்கே வந்தது? வோட்டு வலையை இன்னும் அகலமாக விரிக்கிறார் முதல்வர் என்று வேணுமானால் கூறலாம்!

எதிர்பாராத ஆபத்துக்களும் உண்டு. ஆயிரம் ரூபாய் சம்பாதிப்பவர் ஓரளவு விஷய ஞானம் உள்ளவராக இருக்கக் கூடும். 'இது அரசியல் ஸ்டண்ட்' என்று அவர் உணரத் தொடங்கினால் ஆளும் கட்சி எதிர்பார்க்கும் ஆதாயம் கிட்டாமல் போகும். தவிர, விநியோக முறைகளும் இங்கு திருப்திகரமாக இல்லை. குறைந்த வருமானம் உள்ளவருக்கு இலவச அரிசி, வேட்டி, புடவை போன்றவை விநியோகத்தில் கோல்மால்களும் குளறுபடிகளும் நடந்து, ஏகப்பட்ட அதிருப்தியைத் தி. மு. க. அரசு ஏற்கெனவே சம்பாதித்துக் கொண்டிருக்கிறது. இலவசங்களைப் பெறும் மக்களின் எண்ணிக்கை அதிகமாக ஆக, விநியோகத் தலைவலி, திருகுவலியாகும்!

இதெல்லாவற்றையும் விட மோசமான விஷயம் லாட்டரி, இலவச விநியோகம், கடன் ரத்து போன்றவை மக்களின் உழைக்கும் மனப்பான்மையையும், பொறுப்புணர்வையும் நிலைகுலையச் செய்து வருகின்றன என்பதுதான்.

குறுகிய அரசியல் ஆதாயங்களுக்காக மக்களுக்கு ஆசை காட்டி, வரிப் பணத்தை விரயம் செய்வதில்லை என்று எல்லா அரசியல் கட்சிகளுமே சேர்ந்து முடிவெடுக்க வேண்டிய தருணம் வந்துவிட்டது. பஞ்சாபையும் காஷ்மீரையும் காப்பாற்ற சர்வ கட்சி மாநாடுகள் கூட்டுகிறார்களோ இல்லையோ, நாட்டின் பொருளாதாரத்தைக் காப்பாற்ற ஒரு சர்வ கட்சி மாநாடு நடப்பது அத்தியாவசியமானது!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# குபீர் சிரிப்பு கேட்டதா?



* 'நிலா, நிலா வாங்கோ!' உண்மைச் சம்பவம் படித்து நான் சிரித்த குபீர் சிரிப்பு உங்களுக்குக் கேட்டதா? எங்கள் தெரு முழுக்கக் கேட்டதாக இங்கே சொல்லுகிறார்கள்!

வடுகவிருட்சியூர். ஆர். அமுதா.

* ''உதவும்கரங்கள்'' வித்யாகருக்கிருந்த அக்கரையும், மனித நேயமும் கூடப்பிறந்தவர்களுக்கே இல்லை என்பதைப் படித்த போது மனம் வெகுவாக நொந்தது.

மன்னார்குடி. ஜி. நீலா.

* மனைவியின் அன்பு என்ற அஸ்திவாரத்தின் மீது வாழ்க்கையின் வெற்றி என்ற மாளிகையை எழுப்ப முடியும், என்பது ஓர் அறிஞரின் கூற்று. கோபால் விஷயத்தில் மனைவியின் அன்பு கிடைக்காததுடன், கொடூரமான அரக்கத்தனமும் நடந்துள்ளது. இது போன்ற பெண் உருவப் பேய்களால் பெண்மைக்கே தலை குனிவு.

குரிசிலாப்பட்டு, எஸ். இராஜேஸ்வரி சண்முகம்.

* 'காஷ்மீர் பிரச்னை — நாலு முனைத் தாக்குதல்!' என்ற தலையங்கம் அருமை. ஒவ்வொரு கருத்தும் அற்புதமாக ஆணித்தரமாகச் சொல்லப்பட்டிருந்தது.

சிதம்பரம், என்.ஆர். பாஸ்கரன்.

* பல வருடங்களாகத் தமிழக அரசுடன் போராடும் வேலை இழந்த கர்ணம், முன்சீப்புகளின் வேதனை மிகவும் கவலைக்குரியது. இவர்களின் துயர் துடைக்க உத்தரவாதமளித்த கலைஞர் விரைவில் நடவடிக்கை எடுப்பார் என்று நம்புவோம்.

வேலூர், கே.ஆர். தேவேந்திரன்.

* எங்களுடைய பிரச்னைகளைப் பற்றி விரிவான முறையில் 28.1.90 கல்கி இதழில் வெளியிட்டமைக்கு உளங்கனிந்த நன்றி. எனினும் ஒரு சிறு திருத்தம் சுட்டிக்காட்ட வேண்டியிருக்கிறது.

''கிராம நிர்வாக அலுவலர்களுக்கு உதவியாக, கிராமத்திற்கு இரண்டு பேரை இருநூறு ரூபாய் சம்பளத்தில் அமர்த்தத் தி. மு. க. அரசு முடிவெடுத்துள்ளதாம்'' என்பது ''அறுநூறு ரூபாய் சம்பளத்தில்'' என்று இருக்க வேண்டும்.

சென்னை — 33, டி. எஸ். ராஜகோபாலன், காரியதரிசி, வேலை இழந்த கிராமாதிகாரிகள் சங்கம்.

இருபத்தாறு வயதான என் மகன் பால கிருஷ்ணன், எம்.எஸ்ஸி. முடித்து, வேலைக்கு முயற்சி செய்து கொண்டிருந்த தருணத்தில், திடீரென்று இரு சிறுநீரகங்களும் பழுதுபட்டுப் போக, சென்னை அப்போலோ மருத்துவமனையில் வாரத்துக்கு மூன்று முறை டயாலிஸிஸ் செய்து அவன் உயிர் காத்து வருகின்றனர். சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும் என்று இந்த மருத்துவமனையின் சிறுநீரகப் பிரிவு தலைமை டாக்டர் மணி கருத்துத் தெரிவித்திருக்கிறார். இதற்குக் கிட்டத்தட்ட லட்ச ரூபாய் செலவாகும். என்னிடம் அவ்வளவு பணம் இல்லாததால் கருணை உள்ளம் படைத்தவர்கள் எனக்கு உதவுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

கஸ்தூரிபா நகர், ஏ. நாராயணசாமி.
சென்னை — 20. 24, மூன்றாவது மெயின் ரோடு

* வெற்றிலை பாக்கு போடுவது எப்படி என அறிந்து ஆனந்தம் அடைந்தோம்! அடுத்தபடியாக மூக்குப் பொடி போடுவது எப்படி? கோழி இறகால் சுகமாகக் காது குடைவது எப்படி? விசிறிக் கம்பால் முதுகு சொறிவது எப்படி? சொடக்கு போடுவது எப்படி? போன்ற பல னு ன் ன விஷயங்களைத் தொடர்ந்து வெளியிடும்படி கேட்டுக் கொள்கிறேன்.

மதுரை, ஸ்ரீதேவி தாசன்.

* 'திசை மாறும் அம்புகள்' சிறுகதை சூப்பர்! குற்றம் புரியும் பெரிய புள்ளிகளைப் பிடிக்க முடியாமல், அப்பாவி 'பெரியசாமி' போன்ற ஏழை எளியவர்களைத் தண்டிக்கும் சட்டத்தைக் கோடிட்டுக்காட்டியது. ஆசிரியருக்குப் பாராட்டுக்கள்.

ஆவடி. க. கோபி.

* இன்றைய இளைஞர்கள் அவசியம் படிக்க வேண்டிய ஜீவனுள்ள கதை 'புருஷ லட்சணம்'. வெறும் விரக்தி மனப்பான்மை, ஒட்டு மொத்தமாக அரசாங்கத்தைச் சாடுதல் போன்றவை விவேகமான செயல்களல்ல என்பதைக் கோடிட்டுக் காட்டி, விடா முயற்சி, தன்னம்பிக்கை, அயரா உழைப்பு ஆகிய மூன்றும் தான் வாழ்க்கையில் நாம் மேலோங்கி நிற்க அவசியமானவை என்பதைத் தமது சிறுகதையில் மிக அருமையாகச் சொல்லியிருந்தார் விஜயநிலா!

திருச்சி — 16, ஜானகிமைந்தன்

* 'சுஜன் எழுதிய' அன்புக் கணக்குகள் கதை ஓ.கே. ஆனால், பெற்றோர் சின்னச் சின்ன பொருள்களுக்கு ஆசைப்பட்டு மட்டுமே தம்பியிடம் அன்பு வைப்பது போலவும், அப்பாவி அண்ணனை விரட்டுவது போலவும், சித்தரித்திருப்பது நெருடலாக இருந்தது. உண்மைப் பாசத்துக்குப் பெரியவன் சிறியவன் வித்தியாசங்களோ, பணம், பொருளோ ஒரு பொருட்டாக முடியாது.

ஆட்டையாம்பட்டி, திருமதி தேன்மொழி சந்திரசேகரன்.

* அம்மா + மம்மி = அம்மி. இந்த ஜோக்கை இது வரை நூறு முறை படித்திருப்பேன். இது 101வது முறை!

மயிலாடுதுறை, ஆர். சித்ராராணி.

* ஆந்திராவில் நக்ஸலைட்டுகள் கவர் ஸ்டோரி மனத்தைக் கலக்கியது. நக்ஸலைட்டுகளின் செயல்கள் தவறானவையாக இருந்த போதிலும், ஏழை எளிய மக்கள் மீது நிலப்பிரபுக்களாலும், போலீசாராலும், அரசியல்வாதிகளாலும் நடத்தப்பட்ட ஈவு இரக்கமில்லாத தாக்குதல்களால்தான் அவர்கள் ஆயுதம் ஏந்திப் போராடுவதில் இறங்கினார்கள் என்று அறியும் போது, அவர்கள்பால் அனுதாபமே ஏற்படுகிறது.

சென்னை — 41, சி.ஏ. ராஜு.

* கவர் ஸ்டோரி — தலையங்கம் — டி.கே.சி கவிதை — கஸ்தூரிபாஜி கதை — இவ்வாரக் கல்கியில் விஷயங்களின் கனம் ஏராளம்!

தஞ்சாவூர், டி.பி.எஸ். மணியம்.

# மனநோயாளி பெற்ற புது வாழ்வு

**சா**தாரணமாக எல்லோரையும் போல் இருந்த முருகேசன்.* திடீரென, அடிக்கடி கோபப்பட ஆரம்பித்தார். எதற்கெடுத்தாலும் எரிந்து விழுவார். அவருக்கு வயது முப்பது. மின்வாரியத்தில் பொறுப்பான உத்தியோகம். ஒரு நாள், ஏதோ சிறு காரணத்துக்காக மேலதிகாரி, முருகேசனைக் கோபித்துக் கொள்ள, வார்த்தை தடித்து, முருகேசன், அவரை அடித்து விட்டார். உடனடியாய் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டு, முருகேசன் வேலை இழந்தார். வீட்டிலும் தினசரி சண்டை, சச்சரவு. மனைவிக்கும்.குழந்தைகளுக்கும்.அடி.உதை.தொல்லை பொறுக்க முடியாமல், முருகேசனை, மனநோய் மருத்துவமனையில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டார்கள் அவரது குடும்பத்



டாக்டர் பி.ராமமூர்த்தி

* பெயர் கற்பனை



• டாக்டர் பி. ராமமூர்த்தி

னர்! அங்கே, முருகேசனின் நிலைமை இன்னும் பரிதாபமாகிவிட்டது!

மனநோய் மருத்துவமனைக்கு ஒரு புதிய மருத்துவ அதிகாரி வந்தார். அவர் ஒவ்வொரு நோயாளியாகக் "கேஸ் ஹிஸ்டரி"யைப் படித்துப் பரிசோதனை செய்து பார்த்தார். முருகேசனைப் பரிசோதித்தபோது, அவரது மூளையில், ஏதோ ஒன்று காரணமாய் அதிகப்படியான அழுத்தம் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டது. அதன் காரணமாகவே இத்தனை விளைவுகளும் என்று முடிவு செய்து அவரை என்னிடம் சிகிச்சைக்காக அனுப்பி வைத்தார்.

இப்போதெல்லாம் ஸ்கானர் உதவியால், சில விநாடிகளிலேயே எந்த இடத்தில் என்ன பிரச்னை என்று மிகத்துல்லியமாய்க் கண்டுபிடித்துவிட முடியும். ஆனால் நான் சொல்லும் இந்த நிகழ்ச்சி இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன் நடந்தது. அப்போது ஸ்கானர் போன்ற உபகரணங்கள் எல்லாம் இங்கே கிடையாது. உடலின் உட்புறத்தில் எந்த இடத்தில் என்ன கோளாறு என்றுநிர்ணயிப்பது அத்தனைசுலபமில்லை. மிகக் கவனமாய்ப் பரிசோதனை செய்து பார்த்தபோது, மூளையின் முன் பகுதியில் ஒரு பெரிய கட்டி இருப்பதைக் கண்டுபிடித்தேன். அந்தப் பெரிய கட்டிதான், மூளையில் அதிகப்படியான அழுத்தத்தை ஏற்படுத்தி, சாதாரணமாகக் காரியாலயம் சென்று வேலை பார்த்துக் கொண்டிருந்தவரை, மனநோய் மருத்துவமனைக்கு அனுப்பும் அளவுக்குச் சீர்கெடச் செய்து விட்டது என்பதை அறிந்தபோது எனக்கு மிகவும் வருத்தமாய் இருந்தது. ஆபரேஷன் செய்து கட்டியை அகற்ற முடிவு செய்தேன்.

மூன்று நான்கு மணி நேரமாயிற்று ஆபரேஷன் செய்து முடிக்க. கட்டி அகற்றப்பட்ட சில நாட்களிலேயே முருகேசனிடத்தில் நல்லதொரு மாற்றத்தைக் காண முடிந்தது. அவரை மறுபடி மன நோய் மருத்துவமனைக்கு அனுப்பாமல், அவரது குடும்பத்தாரை அழைத்து, எல்லாவிவரங்களையும் விளக்கிச்சொல்லி 'இனி இவர் சாதாரண மனிதர், சரியாக இருப்பார். அன்பாக நடந்து கொள்ளுங்கள்' என அறிவுரை கூறி அனுப்பிவைத்தேன். முருகேசன் புதுமனிதரானார்.

ஒரு டாக்டர் என்கிற முறையில் என் கடமையை நல்ல முறையில் நிறைவேற்றி வைத்துவிட்டேன் என்றாலும் ஒரு மனிதன் என்கிற முறையில் எனக்கு இன்னும் ஒரு கடமை பாக்கி இருப்பதாய்த் தோன்றியது. எனவே அப்போது முதலமைச்சராக இருந்த பக்தவத்சலத்துடன் தொடர்பு கொண்டேன். முருகேசனின் கதையைக் கூறி 'அவர் இப்போது நலமாக இருப்பதால், அவரை மறுபடி வேலைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்' என்று கேட்டுக் கொண்டேன். முதலமைச்சர் முதலில் தயக்கம் காட்டினார். அதிகாரிகளைக் கலந்து ஆலோசித்தார். அவர்களும் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில் இருந்தவரை மறுபடி வேலைக்கு எடுத்துக் கொள்ள எதிர்ப்பு தெரிவித்தனர். "நீங்கள் அவரை வேலைக்கு எடுத்துக் கொள்ளாவிட்டால், அது எனக்கு மட்டுமல்ல, மருத்துவத்துறைக்கே மாபெரும் அவமானம்" என்று நான் அவர்களுக்கு எடுத்துச் சொன்னேன். அதன்பிறகு அவர்கள் சம்மதிக்க, முருகேசனுக்கு மறுபடி வேலை கிடைத்தது!

சாகும் வரை மனநோய் மருத்துவமனையில் அடைப்பட்டு நலிய வேண்டிய ஒருவர் வாழ்ந்து காட்டினார்.

கேட்டு எழுதியவர்: **மௌனி**
படம்: **ரமணன்**


அடுத்த இதழில்

போலீஸ் நாய்கள்

—ஒரு புலனாய்வுக் கட்டுரை!






உங்கள் முன்னேற்றத்திற்குத் துணை புரிபவர் இவர்தான் என்று தபால்காரரை நாங்கள் சுட்டிக்காட்டினால் அது வியப்பாகத் தோன்றும். ஆனால் உண்மை நிலை அதுதான்.

உங்கள் வாழ்க்கை முன்னேற்றத்திற்கு ஆங்கிலமொழி தடையாக இருக்குமேயானால், கீழ்க்காணும் நிலைகளில் நீங்கள் எந்த நிலையில் இருக்கிறீர்கள் என்பதை சிந்தித்துப் பாருங்கள்...

★ தமிழ் எழுத, வாசிக்கத் தெரிகிறது. ஆனால் ஆங்கிலத்தில் ஒரு வார்த்தை கூட வாசிக்க முடியவில்லை. இதுதான் உங்கள் நிலையா?— அல்லது,

★ பிறர் ஆங்கிலத்தில் பேசுவதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் அவர்களிடம் ஆங்கிலத்தில் பதிலளிக்க முடியவில்லையே என வருந்தும் நிலையா? —அல்லது,

★ பட்டம் பெற்றிருந்தும், ஆங்கிலத்தில் பேசினால் இலக்கணத் தவறு ஏற்பட்டு விடுமோ எனத் தயங்கி நிற்கும் நிலையா?

இனி, கவலை வேண்டாம்.

சுருக்கமாகச் சொல்வதென்றால், ஆங்கிலத்தில் சரளமாகப் பேசவேண்டும், இலக்கணப் பிழையின்றி கடிதம் எழுத வேண்டும் என்ற உங்கள் விருப்பத்தை, ஒரு போஸ்ட் கார்டில் எழுதி **'ஆசியன் இன்ஸ்டிட்யூட்'** நிறுவனத்திற்கு இன்றே அனுப்புங்கள்.

எளிய தமிழில் தபால் மூலம் அளிக்கப்படும் இப்பயிற்சி பற்றிய விபரங்களும், வீட்டிலிருந்தவாறே இப்பயிற்சியில் சேர்ந்து பயன்பெறுவது எவ்வாறென்பது போன்ற விபரங்களும் அடங்கிய ஓர் தகவல் புத்தகத்தை இரண்டொரு நாட்களில் தபால்காரர் உங்களிடம் அளிப்பார்.

போஸ்ட் கார்டில் எழுத வேண்டிய முகவரி :

**ஆசியன் இன்ஸ்டிட்யூட்'**
*4, மில் காலனி,*
**பொன்மேனி [P.O.] மதுரை–10.**



# செண்ட் செந்தில்வேலன்

'அருண் சரண்யா'

பூஜையெல்லாம் முடிந்து படத்தின் முதல் 'ஷாட்' எடுக்க ஆரம்பித்து விட்டார்கள்.

ஃப்ளோர் செயற்கை விளக்குகளால் ஜகஜ் ஜோதியாய் மின்ன, க்ளாப்—பாய் படீரென்று அடித்தான். 'ஆக்ஷன்' என்று அலறினார் தயாரிப்பாளர்—கம்—இயக்குனர் செண்ட் செந்தில் வேலன். (அவர் தினமும் தன்மேல் அபரிமிதமாகத் தெளித்துக் கொள்ளும் 'இன்டிமேட்' மற்றும் 'சார்லி' யினால்தான் 'செண்ட்' என்ற அடைமொழி அவர் பெயருடன் ஒட்டிக் கொண்டது என்பது உங்கள் யூகமானால், அது தவறு).

கதாநாயகன் ராமகாந்த் கதாநாயகி ஸ்ரீசுந்தரியைப் பார்த்து ''கஸ்மாலம்... கழுதை' என்று திட்டினான்.

''கட்...! ஷாட் ஓகே'' என்று திருப்தியுடன் தலையசைத்தார் செண்ட்.

பார்த்துக் கொண்டிருந்த ஒரு நிருபருக்கு (ஃபீல்டுக்குப் புதுசு) ஒரே அதிர்ச்சி. ''சினிமாவோட முதல் காட்சி இப்படி அபசகுனமாத் தொடங்குதே!'' தயங்கியபடி கேட்டார்.

''நீங்க வேறே! செண்ட்டோட முதல் படம் கரும்புமொழி; இரண்டாவது படம் குறும்பு விழி.... இது அவரோட மூணாவது படம்—திருட்டுமுழி. அந்த அளவுக்கு டைட்டிலிலே கூட செண்டிமெண்ட் பார்க்கிறவர் அவர்'' என்று விளக்கமளித்தார் ஓர் உதவி இயக்குனர்.

''அவ்வளவு செண்டிமெண்ட் பார்க்கிறவரு ஏன் முதல் ஷாட்டிலே போயி ஹீரோவை இப்படி அமங்கலமான வார்த்தைகளையெல்லாம் சொல்ல வைக்கிறார்?''

''அது ஒரு தனிக் கதை. 'செண்ட்' டோட முதல் படமான கரும்பு மொழியிலேயும் ஹீரோ ராமகாந்த்தான். அதிலே முதல் ஷாட்டிலே 'ஸ்டார்ட்'னு டைரக்டர் சொன்னதும், ஷூட்டிங் பார்க்க வந்திருந்த 'சாமந்தி' பத்திரிகை நிருபர் ராமகாந்த் கண்ணிலே பட்டுட்டார். ராமகாந்தைப் பற்றிய அசிங்கமான கிசுகிசு ஒண்ணு, முதல் நாள் வந்திருந்த சாமந்தி இதழிலே தான் வெளிவந்திருந்தது. அதனாலே ராமகாந்த் மூடு அவுட்டாகி, அந்த நிருபரைப் பார்த்து 'கசுமாலம், கழுதை'ன்னு திட்ட ஆரம்பிச்சாரு. 'கரும்பு மொழி' வெற்றிகரமா ஓடினதுக்கு, முதல் ஷாட்டிலே ஹீரோ அப்படித் திட்டினதும் ஒரு காரணம்னு 'செண்ட்'டுக்கு செண்டிமெண்ட். அதனாலே தன்னுடைய எல்லாப் படங்களிலேயும் முதல் ஷாட் வசனமா 'க சு ம ா ல ம்! கழுதை'ங்கறதைத்தான் வைப்பார்.''

உண்மைதான். சூப்பர் செண்டிமென்டலிஸ்டாக (!) இருந்ததால்தான் 'செண்டிமெண்ட்' என்பதின் சுருக்கமான 'செண்ட்,' செந்தில் வேலனின் இடுகுறிப் பெயராயிற்று.

'திருட்டு முழி' படப் பூஜைக்காக டில்லி மலைமந்திரிலிருந்து ராமநாத சாஸ்திரிகளை அவர் அழைத்தது யாருக்கும் ஆச்சரியத்தை அளிக்கவில்லை. (அவர்தான் முன்பு வடபழனி கோயில் அர்ச்சகராக இருந்தபோது செண்ட்டின் முதல் இரண்டு பட பூஜைகளையும் செய்தவர்).

ஆனால் செண்டிமென்டைக் காரணமாகச் சொல்லி தன் முதலிரண்டு படங்களின் கதாநாயகியான ஸ்ரீசுந்தரியே திருட்டு முழிக்கும் ஹீரோயின் என்று செண்ட் எடுத்த முடிவு அவரைச் சுற்றியிருந்த அனைவருக்கும் மகா பெரும் பேரதிர்ச்சி அளித்தது. காரணம்—இடைப்பட்ட நாட்களில் ஸ்ரீசுந்தரியின் இடை நாலு பங்கு பெருத்திருந்ததும், அதனால் அவள் மார்க்கெட் இழந்திருந்ததும்தான். இவளுடன் ஹீரோவாக நடித்தால் தன் இமேஜ் போய்விடும் என்று மறுத்த ராமகாந்தை, மூன்று பங்கு அதிகமாய் ரேட்டை உயர்த்திக் கொடுத்துச் சரிக்கட்டினார் செண்ட்.

"சார் க்ரூப் டான்சுக்கு ஐந்து நடனநடிகைங்க வேணும்னீங்களே...'' என்று ஐந்து பெண்களைக் கூட்டி வந்தார் உதவி டைரக்டர்.

''என்னய்யா உதவி டைரக்டர் நீ! இப்படி செலக்ட் பண்ணியிருக்கியே'' என்று கடிந்து கொண்டார் செண்ட்.

''புரியுது சார் 'இவங்க இவ்வளவு ஒல்லியா இருந்தா ஸ்ரீசுந்தரி அவங்களோட ஆடும் போது இன்னும் குண்டாகத் தெரிவாங்களே'ன்னு பாக்கறீங்க, இல்லையா?''

''அட அதில்லைய்யா'' என்று அவரைத் தனியே அழைத்துத் தணிந்த குரலில் விளக்கினார் செண்ட். ''நம்ம கரும்பு மொழி படத்துக்கு கோவாவிலே ஷூட்டிங் நடந்தப்போ ஒரு டான்ஸ் பொண்ணுக்குத் திடீர்னு உடம்புக்கு முடியாம போயி, டான்ஸ் மாஸ்டரே ஸ்பாஞ்ச், கௌனெல்லாம் போட்டுக்கிட்டுச் சமாளிச்சாரே ஞாபகமிருக்கா? அதிலே எனக்கு ஒரு செண்டிமெண்ட். இந்தப் படத்துக்கும் அவரையே அதே மாதிரி நடனப் பெண் காஸ்ட்யூமிலே....''

விவரத்தைக் கேள்விப்பட்டதும் ''அது ஏதோ ஆபத்துக்குப் பாவமில்லேன்னு ஒத்துக்கிட்டேன். அதற்காக இந்தப் படத்திலேயுமா?'' என்று தலையிலடித்துக் கொண்ட

டான்ஸ் மாஸ்டர் பிறகு 'எக்ஸ்ட்ரா பணம் கிடைப்பதால் பாதகமில்லை' என்று ஒப்புக் கொண்டார்.

**பி**ரபல பின்னணிப் பாடகி ஜெகதாவுக்கு ப்ரொடக்ஷன் மேனேஜர் ஃபோன் செய்தார்.

''உங்களை செண்ட் பத்து மணிக்கு ஒலிப்பதிவுக் கூடத்துக்கு வரச் சொல்லியிருக்கார்.''

''சரி சார். ஷார்ப்பா பத்து மணிக்கு அங்கே இருக்கேன்.''

''கெட்டது போங்க. நீங்க பதினொரு மணிக்கு வந்தா போதும்.''

''ஐயையோ! செண்ட் சார் கோவிச்சுப்பார். போன பட ரெகார்டிங்கிற்கே ஒரு மணி லேட்டா போனதுக்கு ரொம்ப வருத்தப்பட்டார்.''

''அதுதான் விஷயமே. நீங்க லேட்டா வந்ததாலதான் படம் ஹிட்டாச்சுன்னு அவருக்கு ஒரு செண்டிமெண்ட்....''

உண்மைதான்! ஜெகதா ரிகார்டிங்குக்கு வரத் தாமதமாக ஆக, செண்ட் உற்சாகமானார்.

**ப**டம் சென்சாருக்குப் போனது. எவ்வளவோ கலைப் படங்களையெல்லாம் பார்த்திருந்த போர்ட் உறுப்பினர்களே ஆடிப் போய் விட்டனர். ''இப்படிக் கூட ஒரு படம் போரடிக்குமா?'' ஆனால் அந்தக் காரணத்துக்காகவெல்லாம் 'கட்'டுகள் கொடுக்க விதிகள் இடம் தராத காரணத்தால், எந்தக் கட்டும் கொடுக்காமல் அனுமதியளிக்க முடிவு செய்தனர். ஆனால் படத்தில் இரண்டு 'கட்' களாவது இருந்தால்தான் ஆயிற்று (செண்டிமெண்ட்!) என்று கண்ணீர் மல்க செண்ட் கேட்டுக் கொண்டதால், கதாநாயகி நாயகனை ஆலிங்கனம் செய்யும் காட்சியைக் 'கொடூரமான வன்முறைக் காட்சி' என்று கருதி இரண்டு 'கட்' செய்தார்கள் உறுப்பினர்கள்.

**'தி**ருட்டு முழி' வெளியானது. 'இயக்குனர் செண்ட்டாம் — படம் நாற்றம் அடிக்கிறது!'; 'பேய்முழி முழிக்கவைக்கிறது திருட்டு முழி!' என்றெல்லாம் விமர்சனங்கள் பத்திரிகைகளில் வெளியாயின.

ஆனால், செண்ட் உற்சாகமிழக்கவில்லை. ஆஸ்தான ஒளிப் பதிவாளர் கிருத்திவாஸனிடம் கூறினார்:

''இதோ பாரு கிருத்தி, நம்ம நம்பி சார் இல்லே, அவருக்குத் தமிழ் நாட்டிலே உள்ள எல்லா நகரங்களிலுமாய்ச் சேர்ந்து பத்து தியேட்டருங்க இருக்கு. நம்ம முந்தைய படங்க அவரோட அத்தனை தியேட்டரிலேயும் 108 நாள் ஓடிச்சு. அதே மாதிரி திருட்டு முழியும் 108 நாள் ஓடிடும். அந்த தியேட்டர்களுக்கும் நம்ம படத்துக்கும் அப்படி ஒரு செண்டிமெண்ட்.''

ஆனால் படம் வெளிவந்த ஒரு வாரத்திற்குள் தன் எல்லாத் தியேட்டர்களிலிருந்தும் நம்பி அதைத் தூக்கப் போவதாகக் கேள்விப்பட்டதும் பதறி, அவரிடம் ஓடினார் செண்ட்.

''செண்ட் சார், நானும் உங்களை மாதிரி செண்டிமெண்டிலே ரொம்ப நம்பிக்கை உள்ளவன்தான்,'' என்று ஆரம்பித்தார் நம்பி. ''ஆறு வருஷங்களுக்கு முன்னே என் மனைவியின் முதல் கர்ப்பம் கலைஞ்சிடுச்சு. அதற்கு ஒரு மாதம் முன்னாலே



தான் ஒரு பாடாவதிப் படத்தை நான் தியேட்டரை விட்டு எடுத்தேன். அந்தத் தயாரிப்பாளர் ரொம்பக் கெஞ்சியும், நான் அந்தப் படத்தைத் தூக்கினதனாலேதான் என் மனைவிக்கு குறைப்பிரசவமாச்சுன்னு எனக்குப் பட்டுது. உங்க முதல் படம் கரும்பு மொழி ரிலீசானப்போ என் மனைவிக்கு ஆறு மாசம். அதனாலே அவளுக்குப் பிரசவமாகிற மட்டும் உங்க படத்தைக் கஷ்டப் பட்டு என் தியேட்டரில் ஓட்டினேன். அடுத்து, உங்க அதிர்ஷ்டம், குறும்பு மொழி ரிலீஸ் ஆனப்பவும் என் மனைவி கர்ப்பமாயிருந்தா. இரண்டாவது குழந்தை பிறக்கும் வரை உங்க படத்தை தியேட்டரை விட்டு எடுக்கல்லே. இரண்டு கு ழ ந் தை க ள் போதும்னு முடிவு எடுத்து, அதைச் செயல் படுத்திட்டோம். இனிமே டப்பா படங்களையெல்லாம் ஓட்ட முடியாது சார்.'' சுறாராகச் சொன்னார் நம்பி.

தெருவில் யாரோ ''கழுதை, இப்பவாவது உனக்கு அறிவு வந்திச்சா?'' என்று திட்ட, அந்த வார்த்தைகள் தன்னை நோக்கியே வீசப்பட்டதாக உணர்ந்தார் செண்ட்.

# அடிமைகளுக்கு அபயம்!



காஞ்சியிலிருந்து வந்த காமாட்சி

**கா**ஞ்சி சங்கர மடத்தில் காமாட்சி என்னும் பசுமாடு, பரமாச்சாரியாரால் அன்போடு வளர்க்கப்பட்டது. வயதான தன் காரணமாகப் பால் கொடுக்கும் சக்தியை இழந்து விட்டாலும் நன்றாகக் கவனிக்கப் பட்டு வந்தது. காமாட்சியைப் போல் நான்கைந்து மாடுகள் சேர்ந்து விட்டன. சென்னையிலிருந்து வாரம் ஒரு முறை பரமாச்சாரியாரைத் தரிசிக்க வந்து கொண்டிருந்த ராதாகிருஷ்ணன், கிருஷ்ணமூர்த்தி இருவரிடமும் ''இந்த மாடுகளுக்குச் சென்னையிலிருந்து காய்கறித் தோல்களைக் கொண்டு வந்து போடுங்களேன்'' என்று பரமாச்சாரியார் ஆக்ஞை இடவே, அவர்களும் சென்னையில் பல ஹோட்டல்களுக்குச் சென்று அங்கிருந்து காய்கறித் தோல்களையெல்லாம் சேகரித்து, மூட்டையாகக் கட்டி காஞ்சிபுரத்திற்கு எடுத்துச் சென்று மாடுகளுக்குப் போட்டு வந்தார்கள்.

திடீரென்று ஒரு நாள் பரமாச்சாரியார் ''இந்த மாடுகளைச் சென்னைக்கே கொண்டு போய் அங்கே கோசாலா ஆரம்பியுங்களேன்'' என்று சொல்லி விடவே, அதன்படி பன்னிரண்டு வருடங்களுக்கு முன் இவர்கள் ஆரம்பித்ததுதான் சென்னை மேற்கு மாம்பலத்தில் உள்ள கோசாலா.

இன்று பரமாச்சாரியார் வளர்த்த காமாட்சி உள்பட அங்கே ஐம்பத்தைந்து கிழட்டு மாடுகள் அடிமாடுகளாக மாறாமல் அன்பர்கள் பலரது தயாள உள்ளத்தால் ஜீவித்து வருகின்றன.

''வருடா வருடம் மாட்டுப் பொங்கல் அன்று விசேஷ பூஜை நடைபெறுகிறது. வெள்ளிக்கிழமை தோறும் கோ பூஜை உண்டு'' என்கிறார் துணைச் செயலாளர் சுலோசனா ராமசேஷன்.

— கௌசல்யா

படம்: **ராஜன்**



# இந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் திரட்டப்பட்ட இணையற்ற-எழில்மிகுந்த பட்டுச் சேலைகள்!




எங்களது பிரத்தியேக
பட்டு விற்பனை நிலையங்கள்

தில்லையாடி வள்ளியம்மை

**பட்டு மாளிகை**

350, பாந்தியன் சாலை, எழும்பூர்,
சென்னை-600 008. போன்: 860775

**தாமரை**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
314-315, ராஜ வீதி,
கோயம்புத்தூர்-641 001.

**பவளம்**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
365, நேதாஜி சாலை,
பெரியார் மன்றம், ஈரோடு-638 001.

**கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை**

57, தேர் நிலையம்,
சேலம்-636 001. போன்: 64651

**அமுதசுரபி**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
12 & 14, தேரடி கடை வீதி,
திருச்சி-620 002. போன்: 25034

**ரேஷ்ம்தாரா**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
சபீனா பிளாஸா (முதல் அடுக்கு)
84, 85, இன்பேன்டரி சாலை,
பெங்களூர்-560 001.

**குஷ்பூ**

கோ-ஆப்டெக்ஸ் பட்டு மாளிகை,
16 & 17, புது மார்க்கெட், திலக் சாலை,
அபிட்ஸ், ஹைதராபாத்-500 001.

DIPR/1379/MS/89/ET

5

# வெற்றி மன்னன்

துளசிங்கம் கேட்டதற்கு, "இருக்காரு!" என்று ஒரே வார்த்தைதான் கௌதம் சொன்னான்.

இருவர் பார்வையும் சில விநாடிகள் ஒருவர் மீது ஒருவராய்க் கவிந்தன.

விட்டலாபுரத்தில் அவனைப் பலமுறை கௌதம் பார்த்திருக்கிறான். புல்லட்டில். கடைகளில். அஞ்சல் நிலையத்தில். பாங்கில். நெருக்கமாய் ஒருவர் முகம் பார்த்து ஒருவர் நிற்கும் சந்தர்ப்பம் நேரவில்லை.

துளசிங்கத்தின் பார்வையில் ஓர் ஆதிக்கம். மமதை தலை நீட்டிய புன்சிரிப்பு. ஒரு பெருமிதமான நைச்சியம்.

'நான் முக்கியமான ஆள். மனமிரங்கி உன்னை ஒரு பொருட்டாக மதிக்கிறேன். உன்னை இதை விட மட்டமாகவும் என்னால் நடத்த முடியும்.'

— இவ்வளவும் சொன்ன பார்வை அது.

நாற்பதை எட்டாதவன். குளுகுளுவென்று சதை வைத்துச் செல்வக் களை பொலிந்த உடம்பு. இளம் தொந்தி. சில்க் ஷர்ட். பாலியஸ்டர் வேட்டி.

அந்த மீசை, தங்கச் செயின், சென்ட், எல்லாவற்றிலும் ஒரு 'மைனர்' பாவனை.

'அடடே வாங்க நாயுடு! என்ன நம்ம காட்டிலே பௌர்ணமி நெலா கௌம்பியிருக்கு...' என்று எவரையாவது உச்சி குளிர வரவேற்கிற மாதிரி அவன் பேசுவதைக் கௌதம் கவனித்திருக்கிறான்.

அது வேறு முகம். வெற்றி முகத்திற்கு ஒரு முகம் போதாது. ஆளுக்கு ஆள் இடத்திற்கு இடம் வேளைக்கு வேளை மாறுபாடு வேண்டும். 'சட்சட்'டென்று மாறுகிற சினிமா ஸ்லைடு மாதிரி ஒரு வசீகரச் சிரிப்பு, ஒரு கனிவு, குறிப்பாகப் பெண்களிடம் — அழகான பெண்களிடம் — நளினமான பரிவு...

வெற்றி முகத்திற்கு ஒரு வெளிக் கணக்கு உண்டு. வீடு, வாசல், தோட்டம் துரவு, பெண்கள்.

துளசிங்கத்தின் வெற்றி அன்னவாசலை விட்டுக் கிளம்பி விட்டலாபுரம் சன்னிதி வீதி வரை பரவி விட்டது. போன மாதம் அங்கே இரண்டாவது வீடு ரிஜிஸ்டர் ஆயிற்று.

மீனா... பவளக் கொடி.. சிவபாக்கியம்.. கடைசியாக அவன் பட்டியலில் சேர்ந்தது மாசிலாவின் மனைவி ரஞ்சிதம்.

எது இவன் வெற்றி ரகசியம்?

பனிச்சென்று கௌதம் மனத்தில் பதில் உதித்தது.

பலவீனங்களை மோப்பம் பிடிப்பது. அடுத்து, அறைந்து இரையைத் தாக்கி விடாமல் — சிறுகச் சிறுகச் சுற்றி வளைத்து மலைப் பாம்பு மாதிரிப் பின்னிக் கொள்வது.

மலைப் பாம்பு! என்ன பொருத்தமான உவமை என்று நினைத்துக் கொண்டே கௌதம் நடந்தான்.

மாசிலாவின் மனைவி ரஞ்சிதம் நினைவு வந்தாள். மதமதர்த்த உடம்பு, சதா வெற்றிலை போடும் சிவந்த வாய். பாவம் மாசிலா!

நுணா மரத்து நிலம் துளசிங்கத்தின் கைக்கு மாறிய மறு வாரம் அவளும் கை மாறி விட்டாள்.

ஆற்றங்கரையோரத் தென்னைக் குளிர்ச்சியும், பாடுபடாத சுகமும் நிழலும், எல்லாவற்றுக்கும் மேலே விட்டலாபுரத்தின் விட்டு விலக முடியாத அழைப்பும் அவளுக்கு முக்கியமாய்த் தோன்றியிருக்கும்.

தோன்றவில்லையெனில் துளசிங்கம் தோன்ற வைத்து விடுவான். அதில் அவன் மன்னன்.

"சார், சைக்கிள் எடுத்துட்டுப் போறாப்ல இல்லியா?"

சைக்கிள் ஷாப்பைத் தாண்டும் போது குமரேசன் குரல் வழிமறித்தது.

திரும்பி "ஓவர் ஆய்லிங் முடிஞ்சுடுச்சா குமாரு?" என்றான்.

"காலையிலியே முடிஞ்சுடுச்சு."

"இப்ப இந்த வழியிலேதான் போனேன். கூப்பிட்டுச் சொல்லலியே நீ?"

"நீங்கதான் ஏதோ கவனமா அவசரமாப் போனீங்க..."

கௌதமின் வண்டி எண்ணெய் தேய்த்த பளபளப்பில் கண்ணுக்குக் குதூகலமாய் நின்றது.

"எவ்வளவு ஆச்சு?"

குமரேசன் மண்டை மண்டையாய் ஏகப்பட்ட தப்புள்ள தமிழில் ஒரு பட்டியல் நீட்டினான் ரூ. 93.80.

"பணம் எடுத்தாரல்லியே குமாரு..."

"நீங்க வண்டியை எடுத்துனு போங்க சார்! அப்புறமா வாங்கிக்கிறேன்!"

ஹேண்டில்பாரைத் தொட்டு, ஸ்டாண்டைத் தள்ளும் போது குமரேசன் மீண்டும்

வையவன்

பேசினான்.

"இவ்ளோ பெரிய படிப்பு படிச்சுட்டு நீங்க பம்பு செட்டு ரிப்பேர் பாக்கறது எங்களுக்கே பெரிய ஷேமா இருக்கு, சார்! என்னா கஸ்மால நாடு சார் இது?"

கௌதம் சிரித்து விட்டான்.

"என்ன சிரிக்கிறீங்களே?"

"இதுக்கு நாட்டைத் திட்ட ஆரம்பிச்சுட்டியே?"

"பின்னே யாரைத் திட்டறது சொல்லுங்க?"

"பம்பு செட் ரிப்பேர் ஒரு வேலை இல்லியா?"

"அது யார் செய்ய வேண்டியது?"

"எனக்குப் பிடிக்குது. அதான் செய்றேன்."

குமரேசனுக்கு இந்தப் பதில் போதவில்லை. புரிந்தது. அவன் மாதிரிப் பலர். ஏறக்குறைய விட்டலாபுரமே இப்படி நினைக்கலாம்.

'டிக்னிடி ஆஃப் லேபர்' என்று இங்கிலிஷில் விளக்குவது அங்கே செலாவணியாகாது. படித்தவன் வெள்ளைச் சட்டையணிந்து வேலை கிடைக்கும் வரை தெருத் தெருவாய்ச் சுற்ற வேண்டும். பார்பர் ஷாப், சைக்கிள் கடை, டீக்கடை, ஜவுளிக் கடை என்று உட்கார்ந்து வம்பளக்க வேண்டும்.

'படிச்சான் வேலை கிடைக்கலே' என்று பரிதாபத்திற்கு ஆளாக வேண்டும். தகுதி வாய்ந்த குடிமகன் ஆக அதுதான் பொருத்தம். இப்படித் தகுதிக் குறைவாய் ஏதேனும் செய்வது பெரிய தப்பு.

சைக்கிளில் ஏறி அமர்ந்தான் கௌதம். ராயஸமான ஓட்டம். ஜில்லென்று காற்றில் மிதக்கிற லகு. கிரீஸும் எண்ணெயும் இழைந்து சக்கரங்கள் சுகமாய் இயங்கின.

குமார் நல்ல வேலைக்காரன். தான் எதற்குப் பொருத்தம் என்று தன்னைத் தானே தேடிக் கண்டுபிடித்தவன்.

மொத்த விஷயமும் அதுதானா?

தன்னைக் கண்டுபிடிப்பதா?

துளசிங்கம் கண்டுபிடித்து விட்டான். ரஞ்சிதம் கண்டுபிடித்து விட்டாள். கொஞ்ச நேரத்துக்கு முன் சந்தித்த இன்ஸ்பெக்டரும் தன்னைக் கண்டுபிடித்து விட்டாரோ?

மனசு அவர் வீட்டில் பார்த்த போட்டோவில் ஒரு கணம் ஆணியடித்து நின்றது.

பிலோமினா... ஜாய் ப்னாஸம் பிலோமினா....

கௌதமுக்குச் சட்டென்று பிரேக் எப்படிப் பிடிக்கிறது என்று பார்க்கத் தோன்றிற்று. போட்டான். சக்கென்று சொன்ன இடத்தில் வண்டி நின்றது. திரும்பினால் சித்தி விநாயகர் சோடா பாக்டரி.

அரை நிஜாரும் வலைப் பனியனுமாய் ஒரு பையன் ஒரு கோலி பாட்டிலில் பச்சைக் கலர் குடித்துக் கொண்டிருந்தான்.

அண்ணாந்து பின் தள்ளிய தலை. கார்பன்—டை—ஆக்ஸைடும் கலர்த் தண்ணீரும் அவன் கண்களைப் பரவசத்தில் செருகிக் கொண்டிருந்தன.

ஒரு வாய் விழுங்கி விட்டு, 'ப்போவ்' என்று பெரிய ஏப்பம் விட்டான் பையன்.

கௌதமுக்கு விளையாடத் தோன்றியது.



''ரொம்பக் காரமா பையா?''

''இல்லே ரொம்ப கய்ாஸு'' அந்தச் சின்ன முகத்தில் ஒரு ஜன்ம சாபல்யம் போன்ற ஜொலிப்பு. அறுபது பைசா கலரிலா? கிடைக்கலாம் — மனசைப் பொறுத்து; ஏக்கங்களைப் பொறுத்து...

நல்ல வெயில்தான். ஆனால் கத்திரி இல்லை. அதன் நாவரட்சி இல்லை. எனினும் ஒரு கலர் குடிக்கலாம் போல் தோன்றிற்று — பையனின் குதூகலத்தைப் பார்த்த போது.

''ஒரு கலர் உடைப்பா.''

''ஐஸ் கலரா சாதாவா?''

பையன் குடிப்பதை நிறுத்திக் கௌதமைப் பார்த்தான். அவன் பாட்டில் முடிந்திருந்தது.

பையனுக்குக் கண் சிமிட்டி விட்டு, கௌதம் ''ஐஸ் கலர்'' என்றான்.

பையன் முகத்தில் ஏக்கம் பந்தலிட்டது. அவன் சாதா கலர் குடித்திருக்க வேண்டும்.

''இன்னொண்ணு குடிப்பியா?''

''ஓ!''

''ஐஸ்?''

''ஓ!''

''ரெண்டா உடைப்பா.''

''என்கிட்டே காசு இல்லியே!''

''நான் குடுக்கறேன்.''

அவன் முகத்தில் ஒளி. நரி முகத்தில் விழித்த களிப்பு. ஓ. ஆனந்தம் எவ்வளவு சுளுவாய். அறுபதே பைசாவில்!

சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தி பாட்டிலை வாங்கினான். பாட்டிலை வாங்கி ஒரு விழுங்கு குடித்தான். கலர் சொரேரென்று வீரியமாய் உள்ளிறங்கியது. புரையேறியது.

''யாரோ நெனைக்கிறாங்க! தலையைத் தட்டிக்கணும்'' பையன் யோசனை கூறினான்.

ஜாய் பிளாஸம் பிலோமினா.

நிழல் மறையாத எக்ஸ்டென்ஷன் சாலையில், ஆக்ஸிலியம் பஸ் ஸ்டாப்பில், வலை கட்டிய டென்னிஸ் கோர்ட்டில் நின்றால் முகம் தெரியும் திருப்பத்தில்...

ஒரு குறுஞ்சிரிப்பு. பிரியம் கசியும் ஒரு நாணப் பார்வை.

பிலோமினா தரை நோவாத மாதிரி நடப்பாள். கழுத்து ஒசிந்து திரும்பினால் அந்தச் சாயல், ஏன் அந்தக் கண்கள்... மான் விழிப்பது போல் இருக்கும்.

இன்னும் அவளுக்கு என் ஞாபகம் இருக்குமா? இருக்கலாம். இருக்கும். இந்த இன்ஸ்பெக்டர் அல்ஃபோன்ஸ் இருதயராஜுக்கு என்னமோ தெரிந்திருக்கிறது. போட்டோவில் அவளைக் காட்டி 'என் தங்கை' என்று ஓர் அடிக்கோடிடுவது போல் அவர் சொன்னார்.

பிலோமினா கௌதமிடம் வாய் விட்டுப் பேசியது அதிகமில்லை. அல்ஃபோன்ஸ் என்று பெயர் சொல்லாமல் ஓர் அண்ணன் போலீஸ் இன்ஸ்பெக்டர் என்று சொல்லியிருக்கிறாள்.

— அது காதல் இல்லை. அதற்கு முந்திய நிலை. ஒரு கண்டுபிடிக்கும் விளையாட்டு. காதலுக்கு உரிமை வேண்டும். ஊடல் வேண்டும். அதற்கு வடிவமுண்டு. உடம்பு. கவர்ச்சி. உதடு. கன்னம். ஆக்கிரமிப்பு எல்லாம் உண்டு — நித்யா போல... அது தேடல். காதலுக்கும் அப்பால்...

தேடிக் காண்பதில் சில சமயம் தாமதமாகி விடுகிறது.

நம்மை நாமே தவறாக — இல்லை பிழையாகக் கண்டுபிடிக்கிறோம். திசை மாறிப் போகிறது. பயணமும் கூட.

''ரொம்ப டாங்க்ஸ்'' என்று பையன் ஒரு 'இங்கிலீஷ்' வார்த்தையை வீசித் தன் பண்பாட்டு முதிர்ச்சியைக் காட்டிக் கொண்டான்.

அவனுக்கு நோமென்ஷன் சொல்லும் போது ஒன்று நினைவு வந்தது. தேடல்களின் போது சொல்லாமல் விடுபட்டது.

பிலோமினா முதலில் அவனது டென்னிஸ் ரசிகை. அந்த ரசனையில் கொந்தளிப்பு இருக்காது. பரவசம் குதி போடாது. உணர்ச்சிச் சுழிப்பு அலை எறியாது.

சில்லென்று பாந்தமாகப் பாதம் தழுவும் ஓடை நீர் மாதிரி உற்சாகம் தரும். ஒரு விவரமறிந்த புன்னகையோடு எதுவுமே அசாதாரணமில்லை; இன்னும் முயன்றால் இன்னும் உயரும் என்று அறிவிப்பது போல் வெளிப்படும் ரசனை அது.

ஒரு சிங்கிள்ஸில் வெறிபிடித்துப் போராடி வென்ற போது ''ஒண்டர்ஃபுல் கேம்! நீங்கட்ரை பண்ணா விம்பிள்டன் வரைக்கும் போகலாம்'' என்று ஒரு சாந்தமான குளிர்ச்சியோடு பிலோமினா சொன்னாள்.

யாரும் அப்படிச் சொன்னதில்லை. குதித்துக் கூத்தாடுவோர் வாயில் கூட அந்த வார்த்தை வந்ததில்லை. அதன் எளிமையே அவனைத் திக்குமுக்காட வைத்து விட்டது.

அவனுக்கு தாங்க்ஸ் சொல்லக் கூடத் தோன்றவில்லை. கன்னம் குழியப் பூத்த அந்த நாணம் மிக்க புகழ்ச்சியின் பசுமை இன்னும் மாறவில்லை.

விம்பிள்டன்! என்ன வார்த்தை அது? புல்மேடு கிராமத்தைச் சேர்ந்த ஒரு ரிடையர்ட் ஹெட் கான்ஸ்டபிளின் மகன்

---

''இந்தப் படம் அறுவைன்னு தயாரிப்பாளரே ஒத்துக்கிட்டார்!''

''எப்படி?''

''படம் முடிஞ்சு 'வணக்கம்'னு டைட்டில் போடறதுக்குப் பதிலா, 'மீண்டும் டி.வி.யில்'னு போட்டிருக்காரே!''

— எஸ். முகம்மது ஆகப்



ஏறுவதற்கு வானத்துக்கு வைத்த ஏணி!

புல்மேடு. பூந்துறை. அன்னவாசல். விட்டலாபுரம். நித்யா. இந்த உறவுகளை எல்லாம் கடந்து எந்த விமானம் வரப் போகிறது அவனை விம்பிள்டனுக்கு ஏற்றிச் செல்ல?

உறவுகள் தேடுகின்றன. கண்டுபிடிக்கின்றன. கால்களைக் கொடி சுற்றுவது போல் பின்னி நிறுத்துகின்றன. கைது செய்கின்றன.

டென்னிஸ் கோர்ட்டுகள்.. ரசாயன வகுப்புக்கள்.. மோட்டார் பம்புகள்.. இல்லை! அவன் கைதாகி விடவில்லை! பாதையில் ஒவ்வொரு கட்டமாக நகர்ந்து கொண்டிருக்கிறான்.

**சி**ல்லறையைக் கொடுத்து விட்டுக் கௌதம் சைக்கிள் ஏறினான்.

பசியில்லை. வயிற்றில் இன்னும் இடியாப்பத்தின் ஈரம்.

பூந்துறை ஸ்டேஷனுக்குப் போய் வரலாம். தாம்போகிப் பாலம் தாண்டி அன்னவாசல் தொட்டால் அப்புறம் இரண்டு கி.மீ.யில் பூந்துறை.

ஸ்டேஷனிலிருந்து புல்மேடு வழியாக ஒரு பஸ் உண்டு. மலைக்குப் போகும் பஸ். சின்னக்கண்ணு என்கிற கோணி ஊசிதான் டிரைவர். புல்மேட்டில் அவர்களது பக்கத்துக் கொல்லைக்காரன். அந்த பஸ் விட்டலாபுரம் வராது. ஸ்டேஷனுக்கு நேரே போய் விடும்.

அப்பாவிடமிருந்து செய்திப் போக்குவரத்துக்குக் கௌதம் அஞ்சல் துறைக்குத் தொந்தரவு வைப்பதில்லை.

பூந்துறை ஸ்டேஷனுக்குப் போனால் டிரைவர் சின்னக்கண்ணு வாயில் சிகரெட்டைக் கடித்தபடியே ஹார்ன் அடிப்பான். புல்மேடு தரிசனம் பிராப்தி ரஸ்து.

**பா**லத்தைத் தொடும் போது மாசிலா முன்னே போய்க் கொண்டிருந்தான்.

'காலையில் ஆதியோடு நடந்த கைகலப்புக்கு ஒரு நியாயம்தான் கேட்டான். மாசிலாவுக்கும் ஒரு நியாயம் இருக்கலாம்.

மடித்துக் கட்டிய வேட்டியும் தோளில் தொங்கும் துண்டுமாய் முன்னால் நடக்கும் மாசிலாவைப் பார்க்க, தைத்த முள்ளை முள் வாங்கியில் குத்தி இழுப்பது போல் ஒரு வேதனை.

துணாமரத்து நிலத்தில் போட்ட குடிசையை விட்டு இவன் வெளியேற மறுப்பதில் ஒரு பிடிவாதம் தெரிந்தது.

வேர்கள் செல்லரித்து இலைகள் உதிர்ந்து ஒப்புக்கு நிற்கும் மரம் போன்ற பிடிவாதம் அது. யார் சொல்லியும் வந்ததில்லை. சட்டத்தின் துணைகிட்டும் என்ற நம்பிக்கை கூட இல்லை.

அந்த மண் உறிஞ்சிய அவனது வியர்வையின் பந்தம் அது. அங்கு தேய்ந்த ஏர் முனைகள், பிடி கழன்ற மண்வெட்டிகள், வந்த வெள்ளங்கள், சுவடு மறைந்த பகல்கள் இரவுகள்.. இவற்றின் பந்தம்.



"இந்த ஹோட்டல்ல ஹோம்லி மீல்ஸ் மாதிரி இருக்கும்னு நான் கேள்விப் பட்டது சரிதான் சார்!"

"எப்படிச் சொல்றீங்க?"

"உங்க சர்வர் எரிஞ்சு எரிஞ்சு விழறப்போ எனக்கு வீட்டு ஞாபகம்தான் வந்தது...!"

— அ. தெய்வசிகாமணி

மண் பேசுகிறது. விலை பேசுகின்ற சொந்தக்காரனிடமல்ல; அதைக் காதலித்து அடக்கியாண்டு. அதனோடு போராடி மடக்கித் தன் வசப்படுத்துகிறவனோடு அது பேசுகிறது.

பம்பு ஷெட்டில் மோட்டார் ஓடும் போது, வாய்க்காலில் மண்வெட்டி போட்டுத் தண்ணீர் மடக்கும் போது, அருகில் நடந்து வந்த கௌதமை அவன் பலமுறை நிமிர்ந்து பார்த்திருக்கிறான்.

அதில் என்ன உறுதி! என்ன ஒரு தன்னிச்சயம். உண்மை ஒன்று இவனுக்குத் தெரிந்திருக்கிறது என்று உணர்த்திய ஒரு மிடுக்கு தென்படும் பார்வை அது.

அவன் இருப்பு ரஞ்சிதத்திற்காக இல்லை. நூறு ரஞ்சிதங்கள் அவனை விட்டு ஓடிப் போனால் கூட மாசிலாவுக்கு அது தூசுக்குச் சமானம்.

மண். அவன் என்னவென்று அவனுக்கு நிரூபித்திருக்கிற மண். அது அவனிடம் அந்தரங்கமாகப் பேசுகிறது. அவன் அதனிடம் மீண்டும் பேசுகிறான். எல்லாம் மௌனமாக நடக்கிறது.

இன்று நேற்றல்ல. இவன் கணக்கு பதினெட்டு வருஷம்! மண்ணுக்கும் உழவனுக்கும் உள்ள கணக்கு மிகப் பழையது. பெரிய பேரேடு. எவன் ஏரைத் தொடுகிறானோ அவனை அந்தப் பழங் கணக்கு பற்றிக் கொள்கிறது.

கௌதம் சைக்கிள் மணியை அடித்தான். மாசிலா திரும்பாமல் ஒதுங்கினான்.

கௌதம் அவன் காலருகில் பிரேக் போட்டான்.

அவன் நின்றான்.

"எவ்வளவு தூரம்?"

"அன்னவாசலுக்கு."

"ஏறிக்கிறியா?" முகத்தால் காரியரைச் சுட்டிக் காட்டினான்.

"தோ நடந்தா கூப்பிடு தூரம்."

"ஏறு. நான் பூந்துறை வரிக்கும் போகணும்."

"ஒங்களுக்கு ஏன் கஷ்டம்... நீங்க மெறிங்க தம்பி."

"சும்மா உட்காரு... ரெண்டு நிமிஷம் ஆவும்."

மாசிலா அரை மனசாக டபிள்ஸ் உட்கார்ந்தான்.

(தொடரும்)

# யார் சுமப்பது...?

சுந்தரத்துக்கு அது சோதனையான நேரம்! ஆஸ்பத்திரிக்கும், வீட்டுக்குமாக இந்த அலைச்சல். ஜென்மத்திற்கும் அவனால் ஜீரணிக்க முடியாமல் மனத்தில் தங்கி விடும் போலிருந்தது.

திடீரென்று அம்மாவுக்கு இப்படி ஆகும் என்று யார் கண்டார்கள்? கம்பெனிக்கு ஆள் வந்த கணத்திலேயே சுந்தரம் ஆடிப் போய் விட்டான். இதற்கு முன் மனைவி, குழந்தை, தங்கை எல்லோருக்குமே உடம்பு சரி இல்லாமல் போயிருக்கிறது! சில சமயம் சுந்தரத்துக்கு இப்படி ஆள் மூலம் தகவலும் கூட வந்திருக்கிறது!

ஆனால் அந்தச் சந்தர்ப்பங்களில் எல்லாம் தைரியமாக நிலைமையை எதிர்கொண்டு சமாளித்த சுந்தரத்துக்கு இந்தத் தடவை எதுவுமே அத்தனைச் சுலபமாய் இல்லை.

அப்போதெல்லாம் அவனை எதிர்பார்க்காமல் எல்லாவற்றையும் எடுத்துப் போட்டுச் செய்ய அம்மா இருந்தாள். எந்த சோதனையின் கனமும் அவன் தோளில் இறங்கியதில்லை. 'யானை பலம்' என்பார்களே, அதை அம்மாவின் அருகாமையில் சுலபமாக உணர முடிந்தது சுந்தரத்தால்!

இப்போது அந்த 'யானை பலமே' அரைகுறையாய்ப் போய் விட்டது என்றால் சுந்தரத்துக்கு யார்தான் ஆறுதல் தர முடியும்!

அவன் அரக்கப் பரக்க ஆஸ்பத்திரிக்கு ஓடிய போது அம்மா நினைவில்லாமல் படுத்திருந்தாள்! சொட்டுச் சொட்டாக க்ளூகோஸ் இறங்கிக் கொண்டிருந்தது. தலைமாட்டில் மனைவியும், கால்மாட்டில் தங்கையும் மூக்கை உறிஞ்சிக் கொண்டிருந்தார்கள்.

மூன்று வயது கீதா, ஒரு வயது மூர்த்தியோடு மழலை பேசிக் கொண்டிருந்தாள்! இன்னும் மௌனமாக உறவுகள்... சோகம் ததும்பச் சுற்றங்கள்... சிநேகிதர்கள் என்று ஒரு சிறிய கூட்டம் வயிற்றில் சங்கடத்தை விதைக்க, சுந்தரம் கண்களில் ஈரம் உணர்ந்தான்.

"திடீர்னு நெஞ்சு வலிக்குதுன்னு சொல்லிக்கிட்டே மயக்கமாயிட்டாங்களாம். ஆபீசுக்கு ஆள் வந்த பின்னாலதான் எனக்கே தெரியும்."

— தனியார் அலுவலகம் ஒன்றில் பணிபுரியும் அவன் மனைவி மெல்லிய குரலில் சொல்லவும் இனி அடுத்து என்ன செய்ய வேண்டும் என்று தீர்க்கமாக யோசித்தான் சுந்தரம்.

முதல் வேலையாக மணமாகி வெளியூரில் இருக்கும் தங்கைக்குத் தந்தி கொடுத்தான். தங்கையின் கணவன் முரளி உறவு என்ற எல்லைக்கு அப்பால் சுந்தரத்தை ஓரளவுக்கு உணர்ந்திருக்கும் நல்ல சிநேகிதன். வலிக்கும் போது இதமாக நீவி விடவும், வழுக்கும் போது பற்றி நிறுத்தவும் சற்றும் தயங்காதவன். இதைப் போன்ற சிக்கலான சமயங்களில் முரளியின் தோழமை சுந்தரத்திற்கு முக்கியமான தேவையாய் இருந்தது.

பணம் ஒரு பிரச்னைதான் என்றாலும் பயப்படும் அளவுக்குப் பள்ளம் தோண்டவில்லை. ஆனால் அம்மாவின் பக்கத்தில் துணைக்கு ஆள் பிடிப்பது ஒன்றுதான் அவஸ்தையாய்த்



ஜெரா

தெரிந்தது. அவனுக்கும் லீவு இல்லை. அவன் மனைவிக்கோ லீவு போட்டால் வேலை போய் விடுமோ என்ற நிலை. பிரசவ லீவு, அது இது என்று இஷ்டத்துக்கு இருந்து விட்டு இப்போது தான் ஓரிரு மாதங்களாக ஒழுங்காக வேலைக்குப் போக முயற்சி செய்து கொண்டிருக்கிறாள்.

தங்கையின் பிரச்னையோ அதற்கு மேல் தலை வலியாய் இருந்தது. ஒரு நல்ல வரன் தகைவது போலத் தெரியவே, சொற்ப சம்பளத்தில் வேலைக்குப் போய்க் கொண்டிருந்த தங்கையைச் சுந்தரம்தான் கட்டாயமாக வற்புறுத்திச் சில மாதங்களுக்கு முன்னால் நிறுத்தி இருந்தான். அவளுடைய நேரமோ, அல்லது இவனுடைய கஷ்ட காலமோ, இருமணம் தள்ளிப் போய் விட, பொறுமை இழந்த தங்கை, போன மாதம் தான் திரும்பவும் வேலைக்குப் போகத் தொடங்கி இருந்தாள். இந்த நேரத்தில் அவளை எந்த தர்மசங்கடத்திற்கும் ஆட்படுத்தும் தைரியம் சுந்தரத்திற்கு இல்லை. இவ்வளவு



# கை கொடுக்கும் குரங்குகள்!

தென் கொரியாவில் பைன் மரக் கொட்டைகள் பொறுக்கக் குரங்குகள் பயன்படுத்தப்பட உள்ளன. தொழிலாளர்கள் குறைவே இதற்குக் காரணம். சோதனை ரீதியில் மனிதர்கள் கொட்டை பொறுக்குவதைவிட ஐந்து மடங்கு அதிகமாக அவை பொறுக்கி விட்டன. கொட்டைகள் பொறுக்கக் குரங்குகளுக்குப் பற்றாக்குறை ஏற்பட்டால், தாய்லாந்து நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப் போவதாக அதிகாரி ஒருவர் தெரிவித்தார்!

— டி. வி. கிருஷ்ணசாமி.

நாட்களாக எல்லோரும் வேலைக்குப் போய் விட, குழந்தைகளைப் பார்த்துக் கொண்டு அம்மா குடும்ப வண்டியை உருட்டிக் கொண்டிருக்க, எந்தக் குழப்பமும் இல்லாமல் இருந்தது.

இப்போது அச்சாணியே கழண்டு கொள்ளும் நிலை வந்த பிறகு அச்சம் ஒன்று மட்டுமே மிச்சமாய் இருந்தது.

சரி, இது ஒரு தற்காலிக தடங்கல்தானே என்று தைரியமாக லீவு போட்டு விட்டு ஆஸ்பத்திரியில் இருந்த சுந்தரத்துக்கு டாக்டர் சொன்னது சாட்டையாய் விழுந்தது.

''மிஸ்டர் சுந்தரம் — இனிமே உங்க மதரை நீங்க ரொம்ப ஜாக்கிரதையா, ஒரு குழந்தையைப் பாத்துக்கற மாதிரி கவனமா பாத்துக்கணும்.. இந்த ஸிவியர் அட்டாக்கிலே இருந்து அவங்க பிழைச்சதே அபூர்வம்! இனிமே எந்த கடுமையான வேலையும் அவங்களுக்குத் தராதீங்க...''

''டாக்டர்... இந்த நிலைமை இன்னும் எத்தனை நாளைக்கு?''

''எத்தனை... நாளைக்கா? கடைசி வரைக்கும் அவங்க நிலைமை இப்படித்தான் இருக்கும் கவனமாப் பார்த்துக்குங்க.''

சுந்தரம் தளர்ந்து போனான். அவன் குழந்தைகளைக் கவனித்துக் கொண்டு, வீட்டையும் நிர்வகித்துக் கொண்டு தினப்படி சம்சாரச் சிறையிலிருந்து விடுபட்டு விடுதலைக் காற்றைச் சுவாசிக்கும் சுதந்திரத்தை அவனுக்குக் கொடுத்திருந்த அம்மாவை இனி அவன் குழந்தை போல் பார்த்துக் கொள்ள வேண்டும்? எப்படி? எப்படி இது சாத்தியமாகும்!

அவன் வேலையை விட முடியுமா? உஹூம்! மனைவியை வேலையை விட்டு நிறுத்தி விட்டால்....? ஐயோ, ஒருவன் சம்பாத்தியத்தில் இந்தக் குடும்பத்தையும் ஓட்டிக் கொண்டு, தங்கையின் கல்யாணத்திற்கும் சேமிப்பது என்பது தலையைச் சுற்றி மூக்கைத் தொடும் தொந்தரவான விஷயம்!

தங்கையைப் பழையபடி வேலையை விட்டு விடச் சொல்லலாம். ஆனால்... வேலையில்லாத காலங்களில் சட்டை போடாத அவன் குழந்தையை இடுப்பில் சுமந்து கொண்டு, பரட்டைத் தலையோடு, கன்னம் ஒட்டிப் போய், கண்ணில் கருவளையம் தாங்கி, சிங்காரித்துக் கொள்வதில் கூட சிரத்தை இன்றி அவள் இருந்து கொண்டிருந்த காட்சி சுந்தரத்தின் மனத்தை விட்டு அகலவில்லை. மீண்டும் அதே ஸ்திதியில் அவளை நிறுத்தி வைத்தால், பார்க்க வரும் மாப்பிள்ளை கூட பயந்து விடும் வாய்ப்பிருக்கிறது.

பிறகு... பிறகு என்னதான் செய்வது! யார்தான் இந்தப் பாரத்தைச் சுமக்க முன்வருவார்கள்! பெற்றுக் கொண்டதுதான் இவன் செய்த பெரும் பிழையோ?

இரவு மனைவியோடு பேசிப் பார்த்தான் சுந்தரம். உள்ளூரில் இருக்கும் மாமனார் வீட்டில் குழந்தைகளைக் கொண்டு போய் விட்டு விட்டு அவளும் அங்கிருந்தபடியே ஆபீஸ் போய் வர வேண்டியது. ஓரிரு மாதங்களுக்குப் பிறகு நிலைமை சீராகும் என்று தெரிந்தால் வேறு முடிவு எடுப்பது என்பதாகச் சுந்தரம் சொன்ன 'ஐடியா' செல்லுபடியாகவில்லை. மனைவி மாய்ந்து போனாள். அவள் கண்ணைக் கசக்க ஆரம்பித்ததும் சுந்தரம் ''இதேதடா வம்பு'' என்று வாயடைத்துப் போனான்.

கொஞ்சம் நேரம் குழம்பிக் கொண்டிருந்தவனின் மார்பில் கோலம் போட்டபடி மனைவி ஜெயாதான் அந்த அஸ்திரத்தைப் பிரயோகித்தாள்.

''ஏங்க... நான் வேணா எங்கம்மாகிட்டே கெஞ்சிக் கேட்டுப் பையனை வச்சுக்க சொல்லிடறேன். நம்ம கீதாவை வேணா உங்க தங்கச்சியோட திருச்சிக்கு அனுப்பிடுங்களேன். அவளுக்கும் ஸ்கூல்லே சேர வயசாயிடுச்சு! அங்கேயே ஒரு ஸ்கூலிலே சேர்த்து விட்டா நல்லாப் படிப்பா. கூடவே நல்ல பழக்கமும் ஏற்படும்! இங்கே இருந்தா கவனிக்க ஆளில்லாம சுத்தமா கெட்டுப் போயிடுவா! அப்புறம் நாம மூணு பேரும் நிம்மதியா வேலைக்கும் போகலாம். அத்தைக்கும் எந்தச் சிரமமும் இல்லே..''

சரேலென்று எழுந்து உட்கார்ந்தான் சுந்தரம். இது நல்ல ஐடியாவாகத்தான் தெரிந்தது. முரளி நிச்சயம் மறுக்க மாட்டான். தங்கையும் கூட! அவர்கள் குழந்தை

## ''எனக்காக இவள்தான் பாவம் எத்தனை சிரமப்படுகிறாள்! சொந்த வீடு கட்டணும் என்கிற இவள் கனவை நனவாக்கணும்னா எனக்குக் கணிசமான தொகை தேவைப்படும்''



தனரட்சாவில் ஒரு குறிப்பிட்ட தொகையை 10 அல்லது 15 ஆண்டுகளில் சேமிக்கத் திட்டமிடுகிறோம். இத்தொகை வருடாந்திர அல்லது அரையாண்டு தவணைகளாக சமமாக பிரிக்கப்பட்டு நமது நிதியில் சேமிக்கப்பட்டு விடும். இவற்றின் ஒரு சிறு பகுதி ஆயுள்காப்பு ஆதாயத்தை அளிப்பதற்கென செலவிடப்படும். மீதமுள்ள தொகைக்கு பதிலாக நமக்கு 10 ரூபாய் முகவிலை கொண்ட தனரட்சா யூனிட்கள் வழங்கப்படும். விபத்து இன்ஷூரன்ஸ் ஆதாயம் இலவசமாக கிடைக்கும்!

பங்கு இலாபங்கள் ஒவ்வொரு ஆண்டும் அறிவிக்கப்பட்டு, அவை நமது யூனிட்களில் மறுமுதலீடு செய்யப்பட்டு, நமது கணக்கில் சேர்க்கப்பட்டுவிடும். துரதிருஷ்டவசமாக நமக்கு ஏதேனும் நேரிட்டால் அச்சமயம் அதுவரை சேர்ந்துள்ள யூனிட்களின் மதிப்புக்கு ஈடான தொகையும் அத்துடன், கட்ட வேண்டிய மீதி தவணைத் தொகையும் நமது வாரிசுதாரருக்கு வழங்கப்பட்டுவிடும்.

நம்மில் பலரும் ஒரே சமயத்தில் கணிசமான தொகை திரட்ட மிகவும் சிரமப்படுகின்றோம். ஆகையால் தனரட்சா யூனிட்கள் நம் அனைவருக்கும் ஆதாயமளிக்கக் கூடிய ஒரு திட்டமாகும்.

தவணைத் தொகைகளை தவறாது செலுத்தி வந்தோமானால் திட்டத்தின் முடிவில், இறுதி அன்பளிப்புத் தொகையாக முறையே 10% அல்லது 15% கூடுதல் தொகை நமக்கு வழங்கப்படும்.

அத்துடன், வருமான வரிச்சட்டம் 80C பிரிவின் கீழ் முதலீட்டுத் தொகைகளுக்கும் 80L பிரிவின் கீழ் பங்கு இலாபங்களுக்கும் வரிவிலக்கு உண்டு.

இவ்வாறு நமது சேமிப்பின் முழு இலக்குத் தொகையும் நிச்சயமாகக் கிடைத்துவிடும்.

**முதலீட்டுத் தொகைகள் சென்ட்ரல் பாங்க் ஆஃப் இந்தியாவின் அங்கீகரிக்கப்பட்ட கிளைகளில் மட்டுமே செலுத்தப்பட வேண்டும்.**

*இன்ஷூரன்ஸே செலவிடப்படும் தொகைகள் வயதுக்கேற்ப மாறுபடும். ஆயுள்காப்பு மற்றும் விபத்து இன்ஷூரன்ஸ் சம்பந்தமான விதிகள் அனுசரிக்கப்படும். சேமிப்பதற்கு அதிகபட்ச இலக்குத் தொகை ரூ.60,000 ஆகும். மேலும் விவரங்களுக்கு எல்.ஐ.சி.யின் எந்த கிளையிலும் அல்லது எல்.ஐ.சி. ம்யூச்சுவல் ஃபண்ட் முகவர்கள் எவரிடமும் தொடர்பு கொள்ளவும்.

# தனரட்சா

நீங்கள் சேமிக்க வேண்டிய தொகையை நிர்ணயித்துக் கொள்ளுங்கள். இந்த திட்டத்தில் தொடர்ந்து முதலீடு செய்யுங்கள். உங்கள் பணம் எவ்வாறு வளர்கின்றது என்று பாருங்கள் அத்துடன் ஆயுள் காப்பீட்டின் ஆதாயத்தையும்*பெற்றிடுங்கள்.



## எல்.ஐ.சி.ம்யூச்சுவல் ஃபண்ட்

உங்கள் நோக்கம் நிறைவேற நாங்கள் உதவுவோம்

R.K.SWAMY/LMF/4694 A-TM



# Gokulam

*— the favourite children's monthly in English, designed lovingly for your child!*

**February Highlights :**

* **Stretch!** *and* **Enemies Forever** — *stories by prize winning young authors.*



* **The Story of Flight** — *an article on aviation-mankind's dream come true.*

* **Pushpagandhi : the Princess of Kalinga** — *a picture story in colour.*

96 EXCITING PAGES FOR JUST Rs. 3.00

Annual Subscription : Rs. 36.00 (India)
Overseas : Rs. 270.00 (Air mail)
: Rs. 120.00 (Sea mail)

For agency and subscription contact :
Gokulam, Guindy, Madras - 600 032
Telephone : 434157, 434190.

**BUY YOUR COPY TODAY!**

யோடு சீதாவையும் பார்த்துக் கொள்வது அப்படி ஒன்றும் சிரமமாய்த் தெரியாது! அந்த நிமிஷம் சுந்தரத்துக்கு நிம்மதியாய் இருந்தது.

“என்ன சுந்தரம், ஏதோ பேசணும்னு சொன்னே!” சட்டையை மாட்டிக் கொண்டே முரளி கேட்ட போது, தயக்கமின்றிச் சொல்லிவிட்டான் சுந்தரம்:

“முரளி! அம்மா இப்படிப் படுத்துட்டாங்களேன்னு ரொம்ப மலைச்சுப் போயிட்டேன் நான். எல்லாரும் வேலைக்குப் போற வீட்ல குழந்தைங்கள யார் கவனிச்சுக்குவாங்க? தங்கையையோ மனைவியையோ வேலையை விட்டுடச் சொல்லலாம்னா, அவங்க ஒத்துக்கவும் மாட்டாங்க. செலவு ஜாஸ்தியாயிருக்கிற இந்த நேரத்துல அப்படிச் செஞ்சா கட்டுப்படியும் ஆகாது. அதனாலே பெரியவ சீதாவை நீ உன்கூட ஊருக்குக் கூட்டிக்கிட்டுப் போய் வச்சுக்கிட்டேன்னா, சின்னவனை என் மாமியார் வீட்ல கொண்டு விட்டுட்டு நாங்க பாட்டுக்கு வேலைக்குப் போய்க்கிட்டு வந்துட்டிருப்போம். அம்மாவும் ‘ரெஸ்ட்’ல இருக்கலாம்...”

முரளியிடமிருந்து இறுக்கமான மௌனமே பதிலாக வந்தது. சுந்தரம் லேசான அவநம்பிக்கையுடன் அவனைப் பார்த்தான்.

“என்ன முரளி... என்ன சொல்ற?”

“என்னால இத ஏத்துக்க முடியலை சுந்தரம். என்ன பிரச்னை வந்தாலும் பெத்த குழந்தைகளை விட்டுப் பிரியற எண்ணம் வரலாமா? உனக்குப் பத்து வயசுல அப்பா திடீர்னு செத்துப் போனப்போ அம்மாவுக்கு இல்லாத பிரச்னையா? அதுக்கப்புறம் அவங்க படிப்படியா ஏத்துக்கிட்டுச் சுமக்காத பொறுப்பா? எல்லாத்தையும் எப்படி அரவணைச்சுப் போனாங்க? உன் பொறுப்பையும் தன் பொறுப்பா இழுத்துப் போட்டுக்கிட்டாங்க...? இப்போ உன் முறை வந்திருக்கு சுந்தரம். இனிமே நீ பொறுப்புகளைச் சுமக்கணும்; தைரியமா சந்திக்கணும். பயந்து ஓடக் கூடாது. இருபது வருஷத்துக்கு முன்னாடி உங்கம்மா இப்ப நீ நினைக்கிறாப்புல நினைச்சிருந்தா... இன்னைக்கு உன் கதையே வேறயா இருந்திருக்குமில்ல...”

சுந்தரம் சரேலென்று நிமிர்ந்து முரளியைப் பார்த்தான். முரளியின் கை அவன் தோளில் இதமாக அழுத்தியது. உள்ளறையில் சீதா வேடிக்கை காட்ட, சின்னவன் கிண்கிணி போலச் சிரித்துக் கொண்டிருந்தான். ‘எப்படித் துணிந்தோம்’ என்று ஒரு கணம் வியந்தான் சுந்தரம். மெள்ள முரளியின் கைப்பற்றி அம்மாவின் படுக்கை பக்கம் சென்றான். அவனுடைய பலவீனமான புன்னகை கூட அவனுக்குப் புதுத் தெம்பு அளிப்பது போல் பட்டது.

# பொன்னியின் செல்வன்

## அத்தியாயம் 55

## ''பைத்தியக்காரன்''

கடம்பூரிலிருந்து தஞ்சைப் பிரயாணத்தின் முதற்பகுதியில் வந்தியத்தேவன் பெரும்பாலும் நினைவிழந்த நிலையில் இருந்தான். கட்டை வண்டி ஒன்றில் அவனைக் கட்டிப் போட்டிருந்தார்கள். கரிகாலன் உயிரிழந்த அன்றிரவு புகையும் தீயும் அவனை வெகுவாக வாட்டியிருந்தன. பிரயாணத்தின் போது சிறிது நினைவு தோன்றிய போதெல்லாம் கண்களின் எரிச்சலும் உடம்பின் நோவும் அவனுக்கு அளவில்லாத வேதனையை உண்டாக்கின. அரை நினைவாக இருந்த போது ஏதேதோ பயங்கரமான தோற்றங்கள் அவன் முன்னே தோன்றி அவனை வாட்டி எடுத்தன. வீரபாண்டியனுடைய தலை மட்டும் அவன் முகத்தருகில் வந்து ''அடே! நீயா என் பழிக்குக் குறுக்கே நிற்கிறாய்?'' என்று கூறி விட்டுக் கோபமாக விழித்தது. நந்தினி சில சமயம் அணிபணி அலங்காரங்களுடன் அவன் முன்னால் நின்று புன்னகை புரிந்து அவனைத் தன் மாயவலையில் அகப்படுத்தப் பார்த்தாள். இன்னொரு சமயம் தலைவிரி கோலமாக நின்று கண்ணீர் விட்டுப் புலம்பினாள். மற்றொரு சமயம் பேய்க் கோலம் பூண்டு பயங்கரமாகச் சிரித்தாள். ஆதித்த கரிகாலனைத் தொடர்ந்து ஒரு நிழலுருவம் கையில் கத்தியுடன் வந்து கொண்டிருந்தது. வந்தியத்தேவன் அதைத் தடுப்பதற்காகப் பாய்ந்து சென்றபோதெல்லாம் இன்னொரு ராட்சத நிழல் வடிவம் பின்புறமாக வந்து அவன் கழுத்தைப் பிடித்து இறுக்கியது. கொழுந்து விட்டு எரிந்த நெருப்பில் அவனை ரவிதாஸனும் அவனுடைய தோழர்களும் தூக்கிப் போட்டார்கள். அவன் உடம்பு பற்றி எரிந்து கொண்டிருந்த போது, சுந்தமாறன் அவனைப் பார்த்து ''அடே சிநேகத் துரோகி! உனக்கு நன்றாய் வேணும்!'' என்றான். பார்த்திபேந்திரன் அவனைப் பார்த்து ''அடே! உனக்கும் இளையபிராட்டி குந்தவைக்கும் திருமணம் நிச்சயமாகி விட்டதா? முகூர்த்தம் எப்போது?'' என்று கேட்டு விட்டு இடி இடி என்று சிரித்தான். சேந்தன் அமுதன் அவனைத் தீயிலிருந்து தப்புவிப்பதற்காக எங்கிருந்தோ ஓடி வந்தான். வைத்தியரின் மகன் பினாகபாணி ஒரு மரத்தடியில் ஒளிந்திருந்து சேந்தன் அமுதன் தலையில் ஒரு பெரிய தடியால் அடித்தான்.

உடம்பெல்லாம் தீப்பற்றி எரிந்த போது வந்தியத்தேவனுக்குச் சகிக்க முடியாத தாகம் எடுத்தது. ''தண்ணீர்! தண்ணீர்!'' என்று அலற எண்ணினான். ஆனால் சப்தம் வரவில்லை. தொண்டை வறண்டு நாக்கு வீங்கி மேலண்ணத்துடன் ஒட்டிக் கொண்டு அவனைப் பேச முடியாமல் செய்தது. இந்த நிலையில் மணிமேகலை கையில் பொற்கிண்ணத்தில் தேவாமிர்தத்தை எடுத்துக் கொண்டு வந்து அவன் வாயில் ஊற்றினாள். அவளுக்கு அவன் நன்றி கூற எண்ணுவதற்குள் அவள் இருளில் மறைந்து விட்டாள்!... ஆகா! இந்தப் பெண்ணின் அன்புக்குப் பிரதியாக மூன்று உலகங்களையும் அளிக்கலாம்! ஆனால் தனக்கு என்று ஒரு சாண் அகலம் உள்ள இராஜ்யம் கூட இல்லாத நிலையில் இருக்கும் போது, மணிமேகலைக்கு மூன்று உலகங்களையும் கொடுப்பது பற்றி நினைப்பது என்ன அறிவீனம்?

அதோ பூங்குழலி! ''என் காதலர்களைப் பார்!'' என்று கொள்ளிவாய்ப் பிசாசுகளை

**அமரர் கல்கி**

அவள் சுட்டிக் காட்டுகிறாள்; என்ன அதிசயமான பெண்! "இந்த மண்ணுலகத்தில் கிடந்து ஏன் உழலுகிறாய்? பொன்னுலகத்துக்கு உன்னை அழைத்துச் செல்லுகிறேன் பார்!" என்று கூறுகிறாள். "பொன்னியின் செல்வன் உள்ள உலகத்தைத்தானே சொல்லுகிறாய்?" என்கிறான் வந்தியத்தேவன். உடனே நாலாபுறமிருந்தும் கொள்ளிவாய்ப் பிசாசுகள் வந்து அவனைச் சூழ்ந்து கொள்ளுகின்றன. வந்தியத்தேவன் பீதியடைந்து கண்களை மூடிக் கொள்கிறான். பிசாசுகள் அவனைக் கட்டித் தூக்கிக் கொண்டு போய்க் கோடிக்கரையின் மணல் மேட்டின் மேலேறிக் கீழே உருட்டி விடுகின்றன....

வந்தியத்தேவன் திடுக்கிட்டுக் கண் விழித்துப் பார்க்கிறான். கையில் தீவர்த்திகளைப் பிடித்த காவல் வீரர்கள் அவனை ஒரு படகில் ஏற்றியிருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்கிறான். இது என்ன நதியோ, தெரியவில்லை. கொள்ளிடம் அல்லது காவேரி அல்லது குடமுருட்டி ஆறாக இருக்கலாம்... இதற்குள் மறுபடியும் இருள் வந்து கவிந்து அவன் அறிவை மறைத்துக் கொள்கிறது...



ப்படி எத்தனையோ விசித்திரமான அனுபவங்களுக்குப் பிறகு திடீரென்று ஏழு கடலும் கொந்தளித்துப் பொங்குவது போன்ற சப்தம் கேட்கிறது. அவன் மேலே ஒரு பெரிய அலை வந்து மோதி அவனை மூழ்க அடிக்கிறது... இப்போது வந்தியத்தேவன் பூரணப் பிரக்ஞை வந்தவனாகக் கண்விழித்துப் பார்க்கிறான். எதிரே சற்றுத் தூரத்தில் தஞ்சாவூர்க் கோட்டை வாசல் தெரிகிறது. அவன் கட்டுண்டு கிடந்த கட்டை வண்டிக்கு முன்னாலும் பின்னாலும் நானா புறங்களிலும் ஜனசமுத்திரமாகக் காட்சி அளிப்பதைக் காண்கிறான். அத்தனை பேரும் சேர்ந்து ஓலமிடும் ஓசைதான் ஏழு கடலும் பொங்குவது போன்ற சப்தமாகத் தனக்குக் கேட்டது என்று அறிகிறான். ஆதித்த கரிகாலரின் கடைசி ஊர்வலம் தஞ்சைக் கோட்டையை நெருங்கி விட்டபடியால்தான் அவ்வளவு கூட்டம் என்றும் தெரிந்து கொள்கிறான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் அத்தனை கூட்டமும் அவ்விடம் விட்டு அகன்று சென்று விடுகிறது. அவனும் சம்புவரையரும் மட்டும் காவலர்கள் சிலர் புடைசூழத் தஞ்சைக் கோட்டைக்குள் அழைத்துச் செல்லப்படுகிறார்கள். ஆகா! அந்த மகா வீரரின் இறுதிக் கிரியைகள் நடக்கும்போது, அவருடைய அந்தரங்கத்துக்குரிய தோழனாக இருந்த தனக்கு அருகில் இருக்கவும் இயலாமற் போயிற்று. அவனுடைய துரதிர்ஷ்டம் இதுமட்டுமா? கடைசி வரையில் அவருடைய உயிருக்கு ஆபத்து வராமல் பாதுகாக்க எவ்வளவோ முயற்சி எடுத்துத் தோல்வியடைந்த தன்பேரில் அவரைக் கொன்றதாகக் குற்றம் சுமத்தியிருக்கிறார்கள்! அவருடைய திருமேனி கடம்பூர் மாளிகையில் பிடித்த தீயிலேயே எரிந்து போகாமல், இத்தகைய மகா வீரனுக்குரிய மரியாதைகளைப் பெருந்திரளான மக்கள் செய்வது சாத்தியமாகும்படி செய்தவன் அவன். அப்படிப்பட்ட தன்னை இப்போது கொலைகாரர்களையும் சதிகாரர்களையும் அடைக்கும் பாதாளச் சிறைக்குக் கொண்டு போகிறார்கள். கொண்டு போனால் என்ன? சீக்கிரத்திலேயே தன்னைப் பற்றி இளைய பிராட்டியும் பொன்னியின் செல்வரும் விசாரிப்பார்கள். விசாரித்துத் தான் சிறையில் அடைக்கப்பட்டது தெரிந்ததும் பதைபதைப்பார்கள். உடனே சிறையின் சாவியை எடுத்துக் கொண்டு ஓடி வருவார்கள். தன்னை விடுதலை செய்வார்கள். கரிகாலரின் உயிரைத் தன்னால் காப்பாற்ற முடியாமற் போன போதிலும் அவருக்காகத் தான் செய்த முயற்சிகளையெல்லாம் அறிந்து பாராட்டுவார்கள்....

ஆனால் உண்மையாகவே பாராட்டுவார்களா? தன்னுடைய ஞாபகம் அவர்களுக்கு இருக்குமா? சகோதரனைப் பறிகொடுத்தவர்கள் அந்தத் துக்கத்தில் மற்றதையெல்லாம் மறந்து விட மாட்டார்களா? தான் குற்றவாளி இல்லை என்று சொன்னால் தான் நம்புவார்களா? நம்பினாலும் முன் போல் தன்பேரில் நட்புரிமை பாராட்டுவார்களா?

தங்க நாணயத் தொழிற்சாலையின் வழியாக அவனைப் பாதாளச் சிறைக்குக் கொண்டு போன போது அவனுடைய நம்பிக்கை வர வரக் குறைந்து கொண்டு வந்தது. அந்தத் தொழிற்சாலையைச் சின்னப் பழுவேட்டரையர் சற்று முன்னதாகவே மூடி விட்டார். அந்த வழியில் அப்போது ஆங்காங்கே சிற்சில காவலர்கள் மட்டும் நின்றார்கள். அவர்கள் பனைமரச் சின்னம் பொறித்த பட்டயங்களைப் பூண்டிருக்கவில்லை. கொடும்பாளூர் வேளார் பழைய சிறைக் காவலர்களையெல்லாம் அனுப்பி விட்டுத் தம்முடைய ஆட்களை அங்கே காவலுக்குப் போட்டிருந்தார். புதிதாகச் சிறைக்குள் வந்த இருவரையும் அவர்கள் வெறிக்க வெறிக்கப் பார்த்தார்கள். ஒருவரோடொருவர் "இவன்தான் கடம்பூர் சம்புவரையன்; இவன் வாணர் குலத்து வந்தியத்தேவன். இளவரசனைக் கொன்ற

சண்டாளர்கள்'' என்று பேசிக் கொண்டது வந்தியத்தேவன் காதில் விழுந்தது. புலிக் கூண்டுகள் இருந்த அறை வழியாக அவர்களை அழைத்துச் சென்ற போது, சோழர் குல மன்னர்களின் மறக் கருணைக்கு அவை சின்னங்களாகத் தோன்றின. மறுபடியும் கீழிறங்கிய படிகள் வழியாக அழைத்துச் சென்று வந்தியத்தேவனை ஒரு தனி அறையில் அடைத்துப் பூட்டி விட்டுக் காவலர்கள் சென்ற போது, அவனுடைய நம்பிக்கை முழுதும் போய் விட்டது. அங்கிருந்து தான் விடுதலையாகப் போவதில்லை. உயிர் போன பிறகு தன் உடலைத்தான் ஒரு வேளை அங்கிருந்து அப்புறப்படுத்துவார்கள் என்று எண்ணிக் கொண்டான். சின்னப் பழுவேட்டரையருக்கு முன்னமேயே தன் பேரில் சந்தேகம். பார்த்திபேந்திரனுக்கோ தன் பேரில் ஒரே துவேஷம். கிழவன் மலையமானுக்குப் பார்த்திபேந்திரன் பேச்சில்தான் நம்பிக்கை. பழுவேட்டரையர்கள் பரிந்து பேசிச் சம்புவரையர் பேரில் குற்றமில்லை என்று சீக்கிரத்தில் விடுதலை செய்து விடுவார்கள். தன்னை விடுதலை செய்வதற்கு யார் சிரத்தை எடுத்துக் கொள்ளப் போகிறார்கள்? ஒருவரும் இல்லை. தன் பேரில் கொலைக் குற்றமே சாட்டி விடுவார்கள். குற்றம் சாட்டிப் பகிரங்கமாக விசாரணை செய்வார்களா? விசாரித்தால் ஒருவேளை அவன் உண்மையை எடுத்துச் சொல்லிப் பார்க்கலாம். இல்லை, இல்லை! விசாரணையே செய்ய மாட்டார்கள். விசாரணை நடத்தினால் நந்தினியைப் பற்றியும் ரவிதாஸன் கூட்டத்தைப் பற்றியும் உண்மை வெளியாக வேண்டியிருக்கலாம். அதையெல்லாம் யாரும் விரும்ப மாட்டார்கள். தன்னை அச் சிறையிலேயே கிடந்து சாகும்படி விட்டு விடுவார்கள். அல்லது விசாரணை ஒன்றுமின்றிக் கரிகாலரைக் கொன்றவன் என்பதாகத் தீர்மானித்து நாற்சந்தியில் கொண்டு போய்க் கழு மரத்தில் ஏற்றி விடுவார்கள்.

தெய்வமே! முதன் முதலில் தஞ்சை நகருக்குப் புறப்பட்டு வந்த போது அவன் உள்ளத்தில் பொங்கிக் கொண்டிருந்த உற்சாகம் என்ன? என்னவெல்லாம் பகற் கனவு கண்டு கொண்டிருந்தான்? முக்கியமாக, குடந்தை ஜோதிடர் வீட்டில் இளைய பிராட்டி குந்தவையையும் வானதியையும் சந்தித்ததிலிருந்து அவன் எப்படிப்பட்ட குதூகலக் கடலில் மிதந்து கொண்டு இந்தத் தஞ்சைக்கு வந்தான்! அப்போது சின்னப் பழுவேட்டரையர் தன்னை ஒற்றன் என்று சந்தேகித்துப் பாதாளச் சிறையில் அடைத்து விடுவாரோ என்று அவன் சிறிது அஞ்சியதுண்டு. அது இப்போது வேறொரு விதத்தில் உண்மையாகி விட்டதே! வானவெளியில் உல்லாசமாகத் திரிந்து பறக்கும் பறவையைப் போல் வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்த தன்னை இந்த இருளடைந்த அறையில் பூட்டி விட்டார்களே! இதில் தன்னால் எத்தனை காலம் இருக்க முடியும்? முடியாது! முடியாது! உயிரை விடுவதற்கு ஏதேனும் விரைவில் வழிதேட வேண்டியதுதான்....

இவ்வாறெல்லாம் எண்ணி எண்ணி ஏக்கமடைந்து செயலற்று உட்கார்ந்திருந்தான் வந்தியத்தேவன்.



ந்தச் சமயத்தில் பக்கத்து அறையில் யாரோ தொண்டையைக் கனைப்பது கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் கர்ண கடூரமான குரலில்,

''பொன்னார் மேனியனே!....''

என்ற தேவாரப் பாடலும் கேட்டது.

வந்தியத்தேவனுக்கு உடனே சேந்தன் அமுதனுடைய ஞாபகம் வந்தது. பாடியவன் அவன் இல்லை. சேந்தன் அமுதனுடைய குரல் தெய்வீகமான இனிமை பொருந்தியது. இப்போது பாடுகிற குரல் கர்ண கடூரமானது. ஆயினும் அதே பாடலை இங்கே பாதாளச் சிறையில் இருப்பவன் பாடும் காரணம் என்ன?

சிவ, சிவா! காதால் கேட்க முடியவில்லை. பாதாளச் சிறையில் அடைபட்டிருப்பது போதாது என்று இந்த அபூர்வமான சங்கீதத்தைக் கேட்கும் தண்டனை வேறேயா?

''யார், அப்பா, அங்கே?'' என்றான் வந்தியத்தேவன்.

''நான்தான் பைத்தியக்காரன்!'' என்று பதில் வந்தது.

''அப்பா! பைத்தியக்காரா! கருணை கூர்ந்து உன் பாட்டை நிறுத்து!''

''ஏன்? என்னுடைய பாட்டு உனக்குப் பிடிக்கவில்லையா?''

''பிடிக்காமல் என்ன? உன் பாட்டு, எனக்கு ரொம்ப ரொம்பப் பிடிக்கிறது!''

''பாட்டை நிறுத்திய பிறகு ரொம்பப் பிடிக்கிறதாக்கும்!''

''அப்படி ஒன்றும் நீ பைத்தியக்காரனாகத் தெரியவில்லை. இந்தப் பாட்டை உனக்கு யார் சொல்லிக் கொடுத்தது?''

''நீ இப்போது இருக்கும் அறையில் சில காலத்துக்கு முன்பு இன்னொரு வாலிபன் வந்திருந்தான். சில நாட்கள்தான் அவன் இருந்தான். அப்போது அவன் ஓயாமல் இந்தப் பாட்டைப் பாடிக் கொண்டிருந்தான்! எனக்கு அது பாடமாகி விட்டது'' என்றான்.



வந்தியத்தேவன் உடனே அந்த வாலிபன் சேந்தன் அமுதன்தான் என்று தீர்மானித்துக் கொண்டான். தான் தப்பித்துச் செல்வதற்கு உதவி செய்ததற்காகச் சேந்தன் அமுதனைச் சின்னப் பழுவேட்டரையர் சில நாட்கள் பாதாளச் சிறையில் அடைத்திருந்தார் என்பதைக் கேள்விப்பட்டிருந்தான். இந்த அறையில் இருந்தவன் அவனாகத்தான் இருக்க வேண்டும். ஆகா! சேந்தன் அமுதன் எவ்வளவு தங்கமான பிள்ளை! எத்தகைய அருமையான சிநேகிதன்!

''இந்த அறையில் சிலநாள் இருந்த வாலிபன் யார்? உனக்குத் தெரியுமா?'' என்று கேட்டான்.

''தெரியாமல் என்ன? அவன் பெயர் சேந்தன் அமுதன். யாரோ ஒரு ஊமைச்சியின் மகனாம்! உண்மையில் அவன் யார் என்பது மட்டும் உலகத்துக்குத் தெரிந்தால்?.....''

''தெரிந்தால் என்ன ஆகும்?''

''உலகமே தலைகீழாகப் போய் விடும்!''

''உலகம் தலை கீழானால், நமக்கு இந்தப் பாதாளச் சிறையிலிருந்து விடுதலை கிடைக்குமா?''

''நிச்சயமாய்க் கிடைக்கும்?''

''அப்படியானால் அவன் யார் என்றுதான் சொல்லேன்?''

''அவ்வளவு சுலபமாக உன்னிடம் சொல்லி விடுவேனா? அதைச் சோழ சக்கரவர்த்தியின் காதிலே மட்டுந்தான் சொல்வேன்! இன்னும் சுந்தர சோழர்தானே சோழ நாட்டின் சக்கரவர்த்தியாயிருக்கிறார்?'' என்று கேட்டான்.

''ஆமாம்; அதைப் பற்றி உனக்கு என்ன

சந்தேகம்!''

''சில நாளைக்கு முன்பு இங்கே சில மாறுதல்கள் நடந்தன. பழைய சிறைக் காவலர்கள் எல்லாம் மாறிப் புதிய சிறைக் காவலர்கள் வந்தார்கள். தங்க நாணய வார்ப்படச் சாலையை மூடி விட்டார்கள். அதை மூடாதிருந்த போது, கன்னார்கள் வேலை செய்யும் சப்தம் இடை விடாமல் கேட்டுக் கொண்டிருக்கும்.''

''ஏன மூடி விட்டார்கள்! ஏன் காவற்காரர்கள் மாறினார்கள்?''

''சின்னப் பழுவேட்டரையர் கோட்டைக் காவலை விட்டு ஓடிப் போய் விட்டாராம். கொடும்பாளூர் வேளார் தஞ்சைக் கோட்டையைப் பிடித்துக் கொண்டாராம். காவற்காரர்களின் பேச்சிலிருந்துதான் இவைகளைத் தெரிந்து கொண்டேன்.....''

''ஓகோ! அதுவும் அப்படியா?'' என்றான் வந்தியத்தேவன். உண்மையிலேயே அவன் பெரு வியப்படைந்தான்.

கொடும்பாளூர் பூதி விக்கிரம கேசரி தன்னை நன்கு சோதித்து அறிந்தவர். அவர் ஒருவேளை தன் பேச்சை நம்பித் தன்னை விடுதலை செய்வாரா? — அவரால்தான் அது எப்படி முடியும்? யாராலேதான் முடியும்? இளவரசர் கரிகாலரைக் கொன்றவன் என்று குற்றம் சாட்டப்பட்டவனை யார்தான் எளிதில் விடுதலை செய்து விட முடியும்?

''என்ன, தம்பி, மௌனமாகி விட்டாய்? மறுபடியும் பாடத் தொடங்கட்டுமா?'' என்று பைத்தியக்காரன் தொண்டையைக் கனைத்தான்.

''வேண்டாம், வேண்டாம்! நீ கூறியதைப் பற்றி யோசித்துக் கொண்டிருந்தேன். சேந்தன் அமுதன் ஊமைச்சியின் மகன் அல்லவென்று சொன்னாயே? பின், அவன் யாராயிருக்கும் என்று யோசிக்கிறேன்.''

''அந்தப் பேச்சை விட்டு விட்டு வேறு ஏதாவது சொல்லு!''

''உன்னை எதற்காகப் பைத்தியக்காரன் என்று சொல்லிக் கொள்கிறாய்?''

''இங்கே வந்தவர்கள் எல்லாரும் என்னைப் பைத்தியக்காரன் என்று சொல்லுவதினாலேதான்.''

''ஏன் அப்படி அவர்கள் எல்லாரும் சொல்லுகிறார்கள்?''

''ஈழத்தில் பாண்டிய வம்சத்து மணிமகுடமும் தேவேந்திரன் அளித்த இரத்தின ஹாரமும் இருக்குமிடம் எனக்குத் தெரியும். என்னை விடுதலை செய்தால் அவை இருக்குமிடம் சொல்வேன் என்று இங்கே வருகிறவர்களிடமெல்லாம் நான் சொல்வதுண்டு. அதற்காக என்னைப் பைத்தியம் என்கிறார்கள்.''

''உன்னைப் பைத்தியம் என்கிறவர்கள்தான் உண்மைப் பைத்தியக்காரர்கள்.''

''நீ என் வார்த்தையை நம்புகிறாயா?''

''பரிபூரணமாக நம்புகிறேன். ஆனால் நான் நம்பி என்ன பயன்! உனக்கு என்னால் ஒரு உதவியும் செய்ய முடியாதே?''

''அப்படிச் சொல்லாதே! நீ இப்போது இருக்கும் அறையில் அடைக்கப்படுகிறவர்கள் எல்லாரும் சீக்கிரத்தில் விடுதலை செய்யப்படுவது வழக்கமாயிருந்து வருகிறது'' என்று சொன்னான்.

''அது என்ன வழக்கம்? சில உதாரணங்



கள் சொல், பார்க்கலாம்."

"யாரோ வைத்தியர் மகன் ஒருவன், பினாகபாணி என்கிறவன், உன் அறையில் அடைக்கப்பட்டிருந்தான். அவனைப் பழுவூர் ராணி நந்தினி தேவி வந்து விடுதலை செய்து அழைத்துப் போனாள். அந்த அறையிலேயே சேந்தன் அமுதன் இருந்தான். அவனைக் குந்தவை தேவியும் கொடும்பாளூர் இளவரசியும் வந்து விடுதலை செய்தார்கள்...."

வந்தியத்தேவன் ஒரு நெடிய பெருமூச்சு விட்டு விட்டு, "அந்த மாதிரி என்னை வந்து விடுதலை செய்ய எந்த ராணியும் இளவரசியும் வர மாட்டார்கள்!" என்றான்.

"அப்படியானால் நானே உன்னை விடுதலை செய்கிறேன்" என்றான் அடுத்த அறையில் இருந்தவன்.

"இப்போதுதான் நீ பைத்தியக்காரன் போலப் பேசுகிறாய்!" என்றான் வல்லத் திளவரசன் வந்தியத்தேவன்.

"இல்லை; என் வார்த்தையை நம்பு!"

"வேறு வழியில்லை; உன்னை நம்பித்தான் தீர வேண்டும்."

"அப்படியானால், இன்றிரவு காவலர்கள் வந்து நமக்கு உணவு அளித்து விட்டுப் போகும் வரையில் பொறுமையுடன் இரு!" என்றான் பைத்தியக்காரன் என்று பெயர் வாங்கியவன்.

## அத்தியாயம் 56

## "சமய சஞ்சீவி"



ன்றிரவு கடைசிக் காவலன் வந்து விட்டுப் போனதும், வந்தியத்தேவன் அடுத்த அறையிலிருந்த பைத்தியக்காரன் என்ன சொல்லப் போகிறான் என்று அறிய ஆவலுடன் காத்திருந்தான்.

அந்த அறையின் ஒரு பக்கத்துச் சுவரில் எலி பிறாண்டுவது போல் ஏதோ சப்தம் கேட்டது. வந்தியத்தேவனுக்குப் புலி சிங்கத்தினிடம் பயமில்லை; ஆனால் பூனைகளுக்கும் எலிகளுக்கும் பயம். இரவெல்லாம் அந்த இருளடர்ந்த அறையில் எலிகளுடன் காலங் கழிக்க வேண்டுமோ என்று கவலைப்பட்டவனாக, "பைத்தியக்காரா! தூங்கிப் போய் விட்டாயா?" என்று கேட்டான்.

அதற்குப் பதில் ஒன்றும் வரவில்லை.

எலி பிறாண்டும் சப்தம் மட்டும் பொதுவாகக் கேட்டுக் கொண்டிருந்தது.

சற்று நேரத்துக்கெல்லாம் சுவரிலிருந்து சில கற்கள் பெயர்ந்து விழுந்து துவாரம் ஒன்று உண்டாயிற்று.

அதன் வழியாகப் பைத்தியக்காரன் குரல், "அப்பனே! தூங்கி விட்டாயா?" என்று கேட்டது.

"இல்லை; தூங்கவில்லை. உனக்காகத்தான் காத்திருக்கிறேன். இது என்ன வேலை?" என்றான் வந்தியத்தேவன்.

"இது ஆறு மாதத்து வேலை. அதற்கு முன்னால் என் கைச் சங்கிலியைத் தறித்துக் கொள்வதற்கு ஆறு மாதம் பிடித்தது" என்றான் பைத்தியக்காரன்.

சற்று நேரத்துக்கெல்லாம் துவாரத்தை இன்னும் பெரிதாகச் செய்து கொண்டு வந்தியத்தேவனுடைய அறைக்குள்ளே அவன் புகுந்தான்.

வந்தியத்தேவன் அவனுடைய கரங்களைப் பிடித்து இறக்கி விட்ட பிறகு, "இவ்வளவு கஷ்டப்பட்டு இந்தச் சுவரில் துவாரம் செய்தாயே? இதில் என்ன பயன்? வெளிச் சுவரில் துவாரம் போட்டாலும் பயன் உண்டு!" என்றான்.

"இங்கிருந்து வெளிச்சுவர் என்பதே கிடையாது. புலிக் கூண்டு அறையின் வழியாகத்தான் வெளியேற முடியும். இந்த அறை சில சமயம் காலியாக இருப்பதுண்டு. அப்போது பூட்டப்படாமலுமிருக்கும். ஆகையால், என் அறையிலிருந்து தப்பிச் செல்வதை விட இங்கிருந்து தப்புவது சுலபம்."

"இன்றைக்கு வந்த என்னை நம்பி இதை வெளிப்படுத்தி விட்டாயே? நான் உன்னைக் காட்டிக் கொடுத்து விட்டால் என்ன செய்வாய்?"

"ஒருவனை நம்பலாம், நம்பக் கூடாது என்பதைக் குரலிலிருந்தே கண்டுபிடிக்கலாம். சேந்தன் அமுதனை நம்புவேன்; ஆனால் பினாகபாணியை நம்ப மாட்டேன். உன் குரலிலிருந்து உன்னை நம்பலாம் என்றும் முடிவு செய்தேன். மேலும் தப்பிச் செல்லும் காரியம் இப்போது நடந்தால்தான் நடந்தது. சரியான சந்தர்ப்பம் இதுதான்!"

"அது ஏன்?"

"காவற்காரர்கள் மாறியிருக்கிறார்கள் என்று சொன்னேன் அல்லவா? அவர்களில் இரண்டு பேர் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டேன். புலிக் கூண்டைத் திறந்து விடுவதைப் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள். 'புலிக் கூண்டைத் திறக்கும் போது நம் பேரிலேயே புலி பாய்ந்து

விட்டால் என்ன செய்கிறது?' என்று ஒருவன் கேட்டான். அதற்கு மற்றவன் 'சாக வேண்டியதுதான்!' என்றான். இதிலிருந்து அவர்கள் புலிக்கூண்டைத் திறக்க மாட்டார்கள் என்பது நிச்சயம். புதிய காவற்காரர்களாதலால் திடீரென்று பாய்ந்து சென்று தப்பித்துக் கொள்ளலாம் என்று என் எண்ணம். எப்படியிருந்தாலும், இங்கேயே கிடந்து சாவதைக் காட்டிலும் விடுதலைக்கு ஒரு முயற்சி செய்து பார்ப்பது நல்லதல்லவா?''

''உண்மைதான்!''

''ஒருவனாக முயற்சி செய்வதைக் காட்டிலும் இரண்டு பேராக முயற்சி செய்வது எளிது. நீ என்னைப் போல் இல்லை; புதிதாக வந்தவன். நல்ல திடகாத்திரனாயிருக்கிறாய். இரண்டு காவலர்களை நாம் இருவரும் கட்டிப் போட்டு விட்டு அவர்களிடமிருந்து சாவிகளைப் பிடுங்கிக் கொண்டு வெளியேறலாம் அல்லவா?''

''நல்ல யோசனைதான். எப்பொழுது புறப்படலாம்?''

''கொஞ்சம் பொறு; சரியான சமயம் பார்த்துச் சொல்கிறேன்.''

''நானும் ரொம்பக் களைத்துப் போயிருக்கிறேன். ஒரு நாள் — இரண்டு நாள் போனாலும் நல்லதுதான்.''



றகு, அந்தப் பைத்தியக்காரன் அவன் சிறையிலிருந்த காலத்தில் வெளி உலகில் நடந்த முக்கிய சம்பவங்களையெல்லாம் வந்தியத்தேவனிடம் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

ஆதித்த கரிகாலர் இறந்தார் என்று கேட்டதும், ''ஆகா! அப்படியானால் நாம் இப்போது வெளியேறுவது மிக முக்கியம்!'' என்றான்..

''ஏன் அப்படிச் சொல்கிறாய்?''

''அடுத்தபடி இராஜ்யத்துக்கு யாரை யாவது இளவரசுப் பட்டம் கட்ட வேண்டும் அல்லவா?''

''இளவரசுப் பட்டம் என்ன? சக்கரவர்த்தி உடல் நோயினாலும் மனச்சோர்வினாலும் பீடிக்கப்பட்டிருக்கிறார். இராஜ்ய பாரத்தை அடியோடு விட்டு நீங்க விரும்புகிறார்!''

''யாருக்கு மகுடம் சூட்டுவதாகப் பேச்சு நடக்கிறது?''

''சிற்றரசர்கள் சிலர் மதுராந்தகருக்குப் பட்டம் கட்ட விரும்புகிறார்கள். மற்றும் சிலர் பொன்னியின் செல்வருக்கு மகுடம் சூட்ட விரும்புகிறார்கள்!''

''சக்கரவர்த்தியின் கருத்து என்ன?''

''இராஜ்யத்தில் வீண் சண்டை ஏற்படாமல் தடுக்கும் பொருட்டு மதுராந்தகர் சிங்காதனம் ஏறுவதையே சக்கரவர்த்தி விரும்புகிறாராம்.''

''அப்படியானால், நாம் சீக்கிரத்தில் வெளியேற வேண்டியது ரொம்ப ரொம்ப அவசரமாகிறது!'' என்றான் அந்தப் பைத்தியக்காரன்.

பிறகு, அவன் ஈழ நாட்டில் பாண்டியர் மகுடமும் இரத்தின ஹாரமும் இருக்குமிடம் பற்றித் தான் தெரிந்து கொண்ட விதத்தை விவரமாகக் கூறினான்.

சோழ குலத்து இரகசியத்தைப் பற்றி மறுபடியும் வந்தியத்தேவன் கேட்டதற்கு, ''அதை இப்போது சொல்ல மாட்டேன். இருவரும் தப்பிப் பிழைத்து வெளியேறினோமானால் சொல்லுவேன். இல்லாவிடில் அந்த இரகசியம் என்னோடு மடிய வேண்டியதுதான்!'' என்றான்.

வந்தியத்தேவனுடைய உள்ளம் தீவிரமாகச் சிந்தனையில் ஆழ்ந்தது. அந்தப் பைத்தியக்காரன் சொல்லக்கூடிய அத்தகைய இரகசியம் என்னவாயிருக்கும் என்று ஊகித்துப் பார்த்தான். பற்பல நிழல் போன்ற நினைவுகள் அவனுடைய மனத்திரையில் தோன்றி மறைந்தன.



டீரென்று வைத்தியர் மகனைப் பார்த்ததும் வந்தியத்தேவனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. தானும் அடுத்த அறையில் உள்ளவனும் சேர்ந்து செய்திருக்கும் யோசனைக்கு இவன் தடை போட்டு விடுவானோ என்று கவலைப்பட்டான். பினாகபாணியின் நயவஞ்சகப் பேச்சை அவன் நம்பவில்லை. அவனும் பைத்தியக்காரனும் இவ் விஷயத்தில் ஒரு மனமுடையவர்களாயிருந்தார்கள். ஏதோ துர் எண்ணத்துடனே தான் பினாகபாணி வந்திருக்கிறான் என்று முடிவு செய்து கொண்டார்கள். ஒருவரைச் சிறையில் விட்டு விட்டு இன்னொருவர் வெளியேறிப் போவதில்லையென்று சபதம் எடுத்துக் கொண்டார்கள். மறுபடியும் பினாகபாணி வந்தால் என்ன செய்கிறது என்றும் தீர்மானித்துக் கொண்டார்கள்.

எனவே, இரண்டாவது தடவை பினாகபாணி வந்த போது இருவரும் முன் ஜாக்கிரதையாக இருந்தார்கள். பைத்தியக்காரனிடம் முத்திரை மோதிரத்தைக் காட்டி அவனுடைய இரகசியத்தைச் சொல்லும்படி வைத்தியர் மகன் கேட்டுக் கொண்டிருந்த போது வந்தியத்தேவன் இரண்டு அறைகளுக்கும் நடுவில் சுவரில் ஏற்கெனவே செய்திருந்த துவாரத்தின் வழியாக ஓசைப்படாமல்

புகுந்து அந்த அறைக்குள்ளே வந்தான்.

பினாகபாணி திரும்பி அவனைத் தாக்கவே, இருவரும் துவந்த யுத்தம் செய்தார்கள். வேறு சமயமாயிருந்தால் வந்தியத்தேவன் வைத்தியர் மகனை ஒரு நொடியில் வென்று வீழ்த்தியிருப்பான். மேலே நெருப்புச் சுட்ட புண்கள் இன்னும் நன்றாக ஆறாதபடியாலும், காளாமுக ராட்சதன் அவனுடைய தொண்டையைப் பிடித்து அமுக்கிய இடத்தில் இன்னும் வலித்துக் கொண்டிருந்தபடியாலும் துவந்த யுத்தம் நீடித்தது. அச் சமயத்தில் பைத்தியக்காரன் கையில் சங்கிலியுடன் வந்து பினாகபாணியின் கழுத்தில் போட்டு இறுக்கினான். பினாகபாணி கீழே விழுந்தான்.

றகு, இருவருமாக அவனை அந்த அறையின் சுவர்களில் இருந்த இரும்பு வளையங்களுடன் சேர்த்துக் கட்டினார்கள். அப்படிக் கட்டும்போதே வந்தியத்தேவன், ''பினாகபாணி! நாம் இருவரும் சக்கரவர்த்தியைக் குணப்படுத்துவதற்காகச் சஞ்சீவி மூலிகையைத் தேடி ஈழ நாட்டுக்குப் போனோமே, நினைவு இருக்கிறதா? அப்போது நாம் சஞ்சீவி கொண்டு வருவதில் வெற்றி பெறவில்லை. ஆனால் இப்போது நீ எங்களுக்குச் 'சமய சஞ்சீவி'யாக வந்து சேர்ந்தாய்! இந்த உதவிக்காக மிக்க வந்தனம். வைத்தியர் மகனாகிய நீ இனிமேல் வைத்தியத்துடன் நிற்பது நல்லது. ஒற்றன் வேலையில் தலையிட்டு ஏன் வீணாகக் கஷ்டத்தை விலைக்கு வாங்கிக் கொள்கிறாய்?'' என்று சொன்னான்.

பினாகபாணி அதற்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. திடீரென்று நேர்ந்த இந்த விபத்தினால் அவன் பேச்சிழந்து நின்றான். ஆனால் அவனுடைய கண்கள் மட்டும் கோபக் கனலைக் கக்கின என்பது அவன் கொண்டு வந்து கீழே போட்டிருந்த தீவர்த்தி வெளிச்சத்தில் நன்றாகத் தெரிந்தது.

பின்னர் இருவரும் வைத்தியர் மகன் கொண்டு வந்திருந்த அதிகார முத்திரையைக் கைப்பற்றிக் கொண்டார்கள். பினாகபாணி தலையில் சுற்றியிருந்த துணியை எடுத்து வந்தியத்தேவன் தன் தலையில் சுற்றிக் கொண்டான்.

அந்த அறையிலிருந்து வெளி வந்து கதவைப் பூட்டினார்கள். பிறகு மெள்ள மெள்ள நடந்து பாதாளச் சிறையின் படிக்கட்டில் ஏறினார்கள். வழி சரியாகத் தெரியாதவர்களாதலால், நிதானமாக அங்குமிங்கும் பார்த்துக் கொண்டு நடந்தார்கள். புலிகளின் உறுமல் சப்தம் கேட்டதும் இருவருக்கும் மேலே போகச் சிறிது தயக்கமாகவே இருந்தது. ஒருவேளை, தாங்கள் தப்புவதை எப்படியோ அறிந்து புலியைக் கூண்டிலிருந்து அவிழ்த்து விட்டிருப்பார்களோ?

வந்தியத்தேவனும் பைத்தியக்காரனும் புலிக் கூண்டு அறைக்குள்ளே மெதுவாக எட்டிப் பார்த்தார்கள்.

அந்த அறையில் அச் சமயம் ஒரே ஒரு காவலன்தான் இருந்தான். உறுமிய புலிகள் இருந்த கூண்டை அவன் உற்று நோக்கிக் கொண்டிருந்தான். ஒருவேளை புலிக் கூண்டைத் திறந்து புலிகளைத் தங்கள் மீது ஏவி விட அவன் யோசிக்கிறானோ, என்ன? அச் சமயம் வைத்தியர் மகன் கூச்சல் போட ஆரம்பித்திருந்தான். அந்தக் கூச்சல் இக் காவலனுடைய சந்தேகத்தைக் கிளப்பி விட்டிருக்கலாம் அல்லவா? பினாகபாணியின் வாயில் துணியை அடைத்து விட்டு வராதது எவ்வளவு தவறாகப் போயிற்று?

(தொடரும்)






# ரகசியம்

இராஜா பாலச்சந்தர்

**பொ**ங்கல் வாழ்த்து நண்பர்களாக மட்டும் அல்லாமல், பொங்கிவந்த மன வுணர்வுகளை அடிக்கடி மடல்களாக்கி மகிழ்ந்தனர் பிராகாஷும், சுந்தரமும். பால் வாடி முதல் பால்ய சினேகிதர்கள். கல்லூரி வரைத் தொடர்ந்தது அவர்களின் தோழமை. வெவ்வேறு மாநிலங்களில் வேலை கிடைத்ததால், நான்கு வருடங் களுக்கு முன் பிரிந்தவர்கள். அதன் பிறகு இன்று வரை கடிதத் தொடர்பு மட்டுமே.

இருவரின் இடைவிடாத நட்புக்குக் காரணம் இருந்தது. கல்லூரிக் காலத் திலேயே இருவரும் கதை எழுதினர். தனித் தனியாகத்தான். சில கதைகள் பிரபல பத் திரிகைகளில் பிரசுரமாகவும் செய்தன.

இருவரும் மற்றவர்களின் நிறை குறை களை விமர்சித்து, விவாதித்துத் தங்கள் தகுதிகளை வளப்படுத்திக் கொண்டனர்.

திறமையைப் பொறுத்தவரை இருவரும் சரிசமமானவர்களே என்றாலும், சமீப கால மாகச் சுந்தரத்தின் சிறுகதைகள் எல்லா பத்திரிகைகளிலும் பரவலாக வெளிவந்து கொண்டு இருந்தன. பத்திரிகைத் துறையின ரால் பேசப்படும் அளவிற்கு அவன் நிலை உயர்ந்து விட்டது. இதைச் சுந்தரத்தின் கடி தங்கள் வாயிலாக அறிந்து மகிழ்ந்தான் பிரகாஷ். ஆனாலும், தனக்கும் அந்த நிலை வரவில்லையே என்ற ஆதங்கம் அவனுக் குள்.

இந்த நிலையை அடைய என்ன காரணம் என்று சென்ற கடிதத்தில் சுந்தரத்தைக் கேட் டிருந்தான் பிரகாஷ்.

இன்று பதில் வந்திருந்தது.

சுருக்கமாகத் தெரிவித்திருந்தான் சுந்தரம். நிறைய எழுதுவதன் மூலமாகப் படைப்பு பக்குவப்படும் என்றும் பத்திரிகை ஆசிரியர் களுடனான பரிச்சயம் அதிகரிக்கும் எனவும் குறிப்பிட்டிருந்தான். தான் ஒவ்வொரு நாளும் குறைந்தது இரண்டு சிறுகதைகளை எழுதி, அவற்றைப் பத்திரிகைகளுக்குச் சர மாரியாக அனுப்புவதாகவும், அதுவே தன் வெற்றியின் ரகசியம் என்றும் எழுதியிருந் தான் சுந்தரம்.

அதைப் படித்த போது வியப்பின் எல் லையில் சஞ்சரித்தான் பிரகாஷ். வாரத் திற்கு ஒரு கதை எழுதுவதே தனக்குச் சிரம மாக இருக்கையில், ஒரே நாளில் பல கதைகள் உருவாக்கும் அளவிற்குச் சுந்தரத் திற்குக் கற்பனை ஊற்று எப்படிச் சுரக் கிறது என்பதைப் புரிந்து கொள்ள முடி யாமல் தவித்தான்.

**இ**ரவு பதினொன்றுக்கு மேல் இருக் கும்.

மேசை விளக்கின் ஒளியில் அமர்ந்து அடுத்த கதைக்கான கருவை யோசித்துக் கொண்டிருந்தான் பிரகாஷ். எதுவும் அவன் கற்பனையில் உருப்படியாகத் தோன்ற வில்லை.

புதிதாக ஒரு கதை எழுதிப் பத்து நாட் களுக்கு மேல் ஆகி விட்டன என்பதை நினைக்கையில் அவனுக்கு அழுகையே வந்தது. தன் மீதே ஆத்திரமாகவும் இருந் தது. அந்தச் சமயத்தில்தான் வாசல் கதவு தட்டப்படும் ஓசை!

'இந்த நேரத்தில் யார்?' என்ற கேள்வி யுடன் எழுந்து சென்று திறந்தவனுக்கு ஆச் சரியம், ''டேய்..... சுந்தரம் நீயா?''

''சாட்சாத் நானேதாம்பா,'' எனச் சிரித் தான் சுந்தரம், ''ஆஃபீஸ் விஷயமா திண்டி வனம் வரைக்கும் வந்தேன். அப்படியே உன்னையும் பார்த்துட்டு போயிடலாம்னு மரக்காணம் பஸ்ல ஏறிட்டேன்.''

''நா ஒரு முட்டாள். வந்தவனை வாசல் லையே நிற்க வச்சு.... உள்ள வாடா முதல்ல,'' என்றபடி, நண்பனின் கையி லிருந்த சூட்கேசைப் பறித்தபடி, சுந்தரத்தை உள்ளே இழுத்தான் பிரகாஷ், ''சாப்பிட் டியா?''

''எல்லாம் திண்டிவனத்துலையே முடிச் சாச்சு. இப்ப என்னால் மேற் கொண்டு எதுவும் பேச முடியாதுப்பா. பிரயாணக் களைப்பு ஆளை அடிச்சு விழ்த்தறதுக்கு



முன்னே நானா படுத்துடறது உத்தமம்,'' கூறியபடியே கட்டிலில் சரிந்து தூங்கிப் போனான்.

விடிந்ததும் எழுந்து, குளித்துத் தயாரானார்கள் நண்பர்கள்.

உடையணிந்தபடி சுந்தரத்திடம் கேட்டான் பிரகாஷ். ''ஒரு சந்தேகம்...''

''என்ன பிரகாஷ்?''

''ஒரு நாள்ல நாலைஞ்சு கதைகள் எழுதறதா லெட்டர்ல எழுதியிருந்தியே, அது சும்மா டுப்புத்தானே?''

சாதாரணமாகச் சிரித்தான் சுந்தரம், ''நா எதுக்குப்பா உன்னிடம் பொய் சொல்லணும்? உனக்கு அதை நம்ப முடியலைன்னா விட்டுடு. ஆனாலும், அது உண்மைதான்.''

''பட், என்னால அப்படி முடியலையே?'' கேட்ட பிரகாஷின் முகத்தில் மேகமாகக் கவலை.

''அதுதான் எனக்கும் ஆச்சரியமா இருக்கு. உன் திறமை எந்த வகையிலும் என்னுடையதுக்குக் குறைஞ்சதில்லையே.''

''சரி வா ஹோட்டல்ல போய் டிஃபன் சாப்பிட்டுட்டு வரலாம் சுந்தரம்.''

''நடந்தா? கொஞ்ச தூரமில்ல?''

''பத்து நிமிஷத்துல போயிடலாம் வா'' என நடக்க ஆரம்பித்தான் பிரகாஷ்.

''ஏன், உன் சைக்கிள்ல டபிள்ஸ் போகலாமே?''

''ஸாரிடா சுந்தரம். அதுல ரெண்டு பேர் போக முடியாது. பின்னால கேரியர் கிடையாது.''

''ஏன்! ஒரு கேரியர் வாங்கிப் பொருத்திட வேண்டியதுதானே?''

அலட்சியமாகச் சிரித்தான் பிரகாஷ். ''அட, நீ வேற.... சிக்ஸ் ப்ளஸ் சிக்ஸ்னு தினம் பன்னிரண்டு கிலோ மீட்டர் சிங்கிளா சைக்கிள் மிதிக்கவே எனக்கு எரிச்சலா இருக்கு. இந்த நிலையில, வழியில பத்து சாவு கிராக்கிங்க லிஃப்ட் கேட்பானுங்க. அதனாலேயே, ஏற்கெனவே இருந்த கேரியரையும் கழற்றிப் பாதி விலைக்கு வித்துட்டேன்.''

''இப்ப எனக்குப் புரிஞ்சுடுச்சு பிரகாஷ்'' வேதனையோடு கூறினான் சுந்தரம்.

''என்ன?''

''உன் வளர்ச்சிக்குத் தடை என்னன்னு...?''

''எனக்குப் புரியலையே?'' குழப்பமாகப் பார்த்தான் பிரகாஷ்.

சுந்தரம் தொடர்ந்தான், ''நானும் தினம் எட்டு ப்ளஸ் எட்டுன்னு பதினாறு கிலோ மீட்டர் சைக்கிள்ல வேலைக்குப் போய் வர்றவன்தான். எப்பவும், வழியில நடக்கறவங்களைப் பின்னால உட்கார வச்சுக்குவேன். ஏதோ, என்னாலான சின்ன உதவி. என்னோட பேச்சுக் குடுத்தபடி வருவாங்க. ஒவ்வொருத்தர் பேசும் போது புதுப்புது விஷயங்கள் சம்பவங்கள் என் கதைகளுக்குக் கிடைக்கும். அவங்க உணர்ச்சிகளையும் என்னோட பகிர்ந்துக்குவாங்க. அதையெல்லாம் வைச்சுத்தான் மனத்தை நெருடவைக்கிற சிறுகதைகளை என்னால எழுத முடியுது. மனுஷங்களைக் கண்டு விலகாதே பிரகாஷ். அவங்களை மதிக்கப் பழகு. ஒரு எழுத்தாளனுடைய பார்வை விசாலமடையணும்னா மனித நேயம் வேணும்....''

பிரகாஷுக்கு மெள்ளப் புரிய ஆரம்பித்தது.

---

## அருள்வாக்கு



இப்போதெல்லாம் பண்பு, நாகரிகம், கலாசாரம், கல்ச்சர் என்கிற வார்த்தைகள் நிறைய அடிபடுகின்றன. ஆனால் இதுகளைச் சொல்லும் போது விநயத்தை முக்கியமான அம்சமாக நினைத்து நாம் பேசவில்லை. முன் காலத்தில் இப்படியில்லை. அப்போது கல்ச்சர், கலாசாரம் என்றாலே அதற்கு முதல் லக்ஷணமாக விநயத்தைத்தான் நினைத்தார்கள். கல்ச்சர், கலாசாரம் என்ற வார்த்தைகளுக்கும் கல்வி என்ற வார்த்தைக்கும் ரொம்பவும் ஸம்பந்தம் இருப்பதை 'கல்' என்பது இவை எல்லாவற்றுக்கும் பொதுவாக இருப்பதிலிருந்தே தெரிந்து கொள்ளலாம். கல்வி பெற்றவர்கள்தான் cultured ஆக, நாகரிக முள்ளவர்களாக இருப்பார்கள். இங்கே கல்வி என்கிற போது எழுதப் படிக்கத் தெரிவதைச் சொன்னதாக அர்த்தமில்லை. நல்ல விஷய ஞானம்தான் கல்வி. அதை வித்யா என்று சொல்வார்கள். அந்த வித்யையின் வாஸ்தவமான ப்ரயோஜனம் 'நமக்கு விஷய ஞானம் வந்துவிட்டது' என்று திமிர் பிடித்து அலையாமல், 'இன்னமும் நாம் தெரிந்து கொள்ள வேண்டியது எவ்வளவோ இருக்கிறது' என்று அடங்கி விநயமாக இருப்பதுதான்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

# வல்லமை தாராயோ?

16

வந்தனா போலீசை அழைக்கச் சொன்னதும் அம்மாவும், கோபியும் திகைத்துப் போய்ப் பார்த்தார்கள்.

''என்னது, போலீசா?'' என்றான் கோபி.

''உனக்கு ஏதாவது அறிவு இருக்காடி?'' என்ற அம்மா அவசரமாகச் சென்று கதவைச் சார்த்தி விட்டு வந்தாள்.

''நீங்க ரெண்டு பேரும் ஆச்சர்யப் படறதுக்கு என்ன இருக்குன்னு புரியலையே'' என்றாள் வந்தனா தலையணையை எடுத்துத் தன் மடியில் வைத்துக் கொண்டு.

''இப்ப என்னத்துக்காகப் போலீஸ்?'' என்றான் கோபி.

''திட்டம் போட்டு போன் செஞ்சி என்னை வரவழைச்சு, பலாத்காரம் செஞ்சி, கற்பழிக்கவே முயற்சி செஞ்சிருக்கான் அவன். எதுக்காகப் போலீஸ்ன்னு கேக்கறீங்களே... நடந்திருக்கிறது எவ்வளவு பெரிய குற்றம் — எவ்வளவு பெரிய அவமானம்!''

''குற்றம்தான் வந்தனா. ஆனா இதைப் பெரிசு படுத்தினா வரப் போறது இதை விடப் பெரிய அவமானம்!''

''எப்படின்னு சொல்லேன்.''

''புகார் கொடுத்தா அரவிந்தை விசாரிப்பாங்க. ஒரு வழக்கா பதிவு செய்வாங்க. பதிவு செஞ்சா செய்தியா பேப்பர்கள்ல வரும். கோர்ட்டுக்கு வழக்கு வரும். நாலு சுவத்துக்குள்ளே நடந்தது நாடு பூரா தெரியும்.''

''பேத்தல்! அப்போ இதுக்கும் மேல ஒரு பெரிய குற்றம் நாலு சுவத்துக்குள்ளே நடந்திருந்தாலும் இப்படித்தான் பேசுவியா கோபி?''

''நல்ல வேளையா நடந்துடலையே. வந்தனா, அரவிந்த் இப்பத்தான் இங்கே வந்துட்டு உன்னைப் பார்த்துட்டு என்கிட்டேயும், அம்மாகிட்டேயும் ரொம்ப ஃபீல் பண்ணி, 'ட்ரிங் சாப்பிட்ட எஃபெக்ட்ல தப்பா நடந்துக்கிட்டேன், என்னை மன்னிச்சுருங்கன்னு சொல்லிட்டு, இப்பவும் உன்னை நேசிக்கிறதாகவும் உனக்கும் நம்ம குடும்பத்துக்கும் சம்மதம்ன்னா கல்யாணம் பண்ணிக்கிறதாவும் சொல்லிட்டுப் போனான்.''

வந்தனா, ''சபாஷ்!'' என்று கை தட்டிச் சிரித்தாள்.

''எதுக்குடி இப்ப சிரிக்கிற?'' என்றாள் அம்மா.

''எவ்வளவு பெரிய நடிகன் பாரு அவன்! நெருப்பையும் பத்த வச்சிட்டு, ஃபயர் சர்வீசுக்கும் போன் பண்ற கதையா.... மிருகம் மாதிரி நடந்துக்கிட்டு உடனே சாது மாதிரி வந்து மன்னிப்பு கேக்கறதுன்னா சிரிக்காம என்ன செய்யறது?'' தொடர்ந்து சிரித்தாள் வந்தனா.

''ஸ்டாப் இட் வந்தனா'' என்ற கோபி சற்றுக் கடுமையாக, ''உனக்கு எதிலயும் சந்தேகப் பார்வைதான். யார் மேலயும் நம்பிக்கையே கிடையாது. பொதுவாவே ஆம்பளைன்னா அயோக்யன்னு ஒரு எண்ணம் உனக்குள்ளே பதிஞ்சிருக்கு. நடந்தது என்னவோ தப்புதான். ஆனா அவன் ஸ்டேட்டசுக்கு இப்படி வந்து மன்னிப்பு கேக்க வேண்டிய அவசியமில்லை. அவன் நிஜமா உணர்ந்து பேசறான். உன் மேல உயிரையே வச்சிருக்கான்.''

''எதுக்காக அவசர அவசரமா வந்து உங்ககிட்டே மன்னிப்பு கேட்டான் தெரியுமா? நான் போலீஸ்ல ரிப்போர்ட் செய்யாம நீங்க தடுக்கறதுக்கு — தந்திரம்! அதைப் புரிஞ்சுக்கலை நீங்க.''

''வந்தனா!'' என்றாள் அம்மா அதட்டல் குரலில், ''உன்னைப் பத்தி எனக்குத் தெரியும். உனக்குன்னு மனசுல சில விஷயங்களை நல்லதுன்னு வகுத்து வச்சிக்கிட்டு அதிலயே பிடிவாதமா நிக்கிறவ. தேவையில்லாததுக்கெல்லாம் தன்மானம் பார்க்கிறவ. அந்தப் பையன் உன்னைக் கல்யாணம் செய்துக்க ஆசைப்பட்டுச் சொன்னான் இல்லையா? வீட்ல எங்ககிட்டே சொன்னியா? என்ன சொல்லட்டும்னு கேட்டியா? நீ என்னமோ மகாராணி மாதிரி மனசில நினைச்சுக்கிட்டு நீயா முடிவெடுத்து வேலையைத் தூக்கி வீசினியே, அது சரியா?''

''என்னம்மா பேசறே நீ? என் கல்யாணம் பத்தி நான் முடிவெடுக்காம யார் முடிவெடுப்பாங்க? எனக்கு விருப்பம் இருந்தாத்தானே நான் அடுத்த கட்டமா வீட்ல சொல்ல வேண்டி வரும்?''

''இதுக்குத்தான் திமிர்ன்னு பேரு. படிச்சிட்ட திமிர். சுயமாச் சம்பாதிக்கிற திமிர். எல்லா குடும்பங்கள்லயும் பொண்ணுங்க கல்யாணத்தை அவங்களேதான் முடிவெடுக்கறாங்களா?''

''இல்லைங்கிறதுதான் கசப்பான

பட்டுக்கோட்டை பிரபாகர்

உண்மை. அப்படி நான் கோபமா வேலையைத் தூக்கி எறிஞ்சதுக்கும், என்னைப் பலவந்தப் படுத்தினதுக்கும் சரியாப் போச்சுன்னு சொல்றியா?

''இல்லை. அந்த நிலமையை நீதான் ஏற்படுத்தினேன்னு சொல்றேன். அந்தத் தம்பிக்கு என்னடி குறைச்சல்? அழகா, பணமா? உன் மேல உள்ள ஆசையில கொஞ்சம் அத்து மீறிட்டான். அதுவும் சுய நினைவில இல்லாம. அந்த யோசனை கூட அவன் ஃப்ரெண்டு சொல்லிருக்கான். இப்ப அதெல்லாம் விடு. ஆனது ஆயிடுச்சி. பெருந்தன்மையோட அந்தத் தம்பி வந்து மன்னிப்பு கேட்டதும், பேசினதும் எனக்கு ரொம்ப பிடிச்சிருந்தது. நீ நினைக்கிற மாதிரி மோசமான ஆசாமியா இருந்தா இப்படி நடக்க மாட்டான். அதனால இந்தக் கல்யாணத்துக்கு நீ ஏன் ஒப்புக்கக் கூடாது?

அதிர்ந்து போய்த் தன் அம்மாவைப் பார்த்தாள் வந்தனா. அம்மாதான் பேசுகிறாளா? அவன் மேல் துளிக்கூட கோபமே வரவில்லையா? அந்த அளவிற்குச் சாமர்த்தியமாகப் பேசி, மூளைச் சலவை செய்து விட்டானா?

''அர்த்தமில்லாம பேசாதே. ஐ ஹேட் ஹிம். அவன் தன் காதலை வெளிப்படுத்தினதில கூடத் தப்பில்லை. அப்பக்கூட ஒரு ஜெண்டில்மேனாத்தான் நினைச்சேன். ஆனா நேத்து நடந்த சம்பவத்தை எந்த தன்மானமுள்ள பொண்ணும் தாங்கிக்க மாட்டாள். கொஞ்சம் கூடப் பண்பாடு இல்லாம என் மேல பாய்ஞ்சு.... ச்சே! அந்த ஆளைக் கல்யாணம் பண்ணிக்கிறதா?

''வந்தனா, உங்கப்பா குடிச்சுட்டு வந்து என்னை எத்தனையோ தடவை அடிச்சிருக்கார். காலால உதைச்சிருக்கார். அதுக்காக வீட்டுக்குள்ளே வராதீங்கன்னு சொன்னதில்லை.''

''அதே ஏமாளித்தனத்தையும், கோழைத் தனத்தையும் உன் பொண்ணுகிட்டேயும் எதிர் பார்க்காதேம்மா. என்னை என் வழில நடக்க விடு. கோபி, முதல்ல எனக்கு ட்ரீட்மெண்ட் எடுத்த டாக்டரைக் கூப்பிடு. அப்புறம் ஏரியா போலீஸ் இன்ஸ்பெக்டரைக் கூப்புடு.''

கோபி மௌனமாக நின்றான்.

அம்மாவுக்கு மூக்கின் நுனி எல்லாம சிவக்க, கோபம் வந்து, ''கோபி, நான் வீட்டுக்குப் போறேன். பொண்ணா லட்சணமா அடக்கத்தோட, போலீஸ் அது, இதுன்னு ஆர்ப்பாட்டம் பண்ணாம உன்னோட புறப்பட்டு வீட்டுக்கு வர்றதானா அழைச்சுட்டு வா. இல்லை, நம்ம குடும்ப மானத்தைக் காத்துல பறக்க விட்டுத்தான் தீருவேன்னு பிடிவாதம் பிடிச்சான்னா, நம்ம வீட்டை மிதிக்கக் கூடாது.'' என்று வேகமாகப் பேசிவிட்டுப் புறப்பட்டுச் சென்றதும், கோபி அவளருகில் வந்தான்.

''வந்தனா, கொஞ்சம் படபடன்னு பேசாம பொறுமையாக் கேளு. அம்மா சொன்ன மாதிரி, அரவிந்த் கேட்டுக்கிட்டதால நீ அவனைக் கல்யாணம் பண்ணிக்கிறதில தப்பில்லைன்னு நான் சொல்ல மாட்டேன். அது முழுக்க, முழுக்க உன் பர்சனல் விஷயம். அவன் உன்னை விரும்புறதுக்கு எவ்வளவு உரிமை இருக்கோ, அதே மாதிரி அவனைப் புறக்கணிக்கிறதுக்கும் உனக்கு உரிமை இருக்கு. ஆனா நேத்து நடந்த சம்பவத்தைப் பொறுத்த வரைக்கும் அவன் மன்னிப்பு கேட்டுட்டான். இதோட விவகாரத்தை விட்டுடறதுதான் பெட்டர்ன்னு எனக்குத் தோணுது.

''அண்ணா, உனக்குக் கூடவா புரியலை, அவன் மன்னிப்பு கேட்டது ஒரு நாடகம்.''

''சரி, அவன் மன்னிப்பு கேட்டதுக்காக வேணாம். உன் பேர் டேமேஜாய்டும்னா வது புரியலையா? பேப்பர்ல வரும். கோர்ட்ல சொல்லணும். இதெல்லாம் தேவையா? நீ கல்யாணமாக வேண்டிய பொண்ணு. நாலு பேர் நாலு விதமாப் பேசுவான். அதையெல்லாம் யோசிக்க வேணாமா?''

வந்தனா கைகளைக் கட்டிக் கொண்டாள். கண்களை மூடிக் கொண்டாள். சில விநாடிகள் அமைதியாக இருந்தாள்.

''பெண் தனக்கு ஏற்படுத்தப்படற கொடுமையை வெளில சொன்னா அவமானமா போய்டும்ங்கிறதையே ஒரு பலமா எடுத்துக்கறாங்க இந்த ஆம்பளைங்க. எல்லாரும் அப்படி இருக்க மாட்டாங்கன்னு காட்ட வேணாமா? குனிஞ்சிக்கிட்டே இருக்கிற தலை நிமிரவும் செய்யும்னு உணர்த்த வேணாமா? சட்டம், போலீஸ் எல்லாம் எதுக்குத்தான் இருக்கு? இதில ஒண்ணும் அவமானம் இருக்கிறதா எனக்குத் தெரியலை. நான் போலீஸ்ல கம்ப்ளைண்ட் பண்ணத்தான் போறேன். தயவு செஞ்சு வற்புறுத்தாதே. உன் வார்த்தையைக் கேட்கலைன்னு வருத்தமும் படாதே'' என்றாள் தீர்மானமாய்.

''அடிச்சுத் திருத்தற வயசில்லை இது. சொல்லத்தான் முடியும். மீறி மீறிப் பிடிவாதம் பிடிச்சா என்ன செய்ய முடியும்?''

''இது பிடிவாதமில்லை, தன்மானம்னு உனக்குப் புரியலையா?''

கோபி நிமிர்ந்து வெறுப்புடன் அவளைப் பார்த்து, ''நான் புறப்படறேன். நீ யார்கிட்டே வேணாலும் புகார் செய். எந்த முடிவு வேணும்னாலும் எடு. அம்மா சும்மா கோபத்தில சொன்னாங்க. அதை மனசுல வச்சிக்காம வீடு வந்து சேரு. நான் போறேன்'' என்று புறப்பட்டுச் சென்றான்.

கோபி சென்ற பிறகு, வந்தனா பொங்கி வந்த விம்மலைப் பற்களைக் கடித்துக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

ஏன் என்னை யாருமே புரிந்து கொள்ள மாட்டேனென்கிறார்கள்? ஒரு பெண்ணை போன் செய்து வீட்டிற்கு வரவழைத்து, அறைக்குள் கதவைச் சாத்தி, அறைவதும், கட்டிப் பிடிப்பதும், முத்தமிடுவதும், மான



பங்கப் படுத்த முயல்வதும்.... சாதாரண விஷயமா?

வெளியே சொன்னால் அவமானம் என்று எல்லாவற்றையும் விழுங்கிக் கொண்டு நான் பொறுமையாகப் போக வேண்டுமா? இதில் என்ன அவமானம்? இந்தச் சமுதாயம்தான் அவமானப் பட வேண்டும்.

வந்தனா கட்டிலில் இருந்து இறங்கினாள். ஆஸ்பத்திரி உடையைக் களைந்து புடைவை அணிந்தாள். தன் அறையை விட்டு வெளியேறி டாக்டரின் அறை எது என்று விசாரித்துக் கொண்டு நடந்து உள்ளே நுழைந்த போது, டாக்டர் கொட்டாவி விட்டு வீட்டிற்குப் புறப்படடுக் கொண்டிருந்தாள்.

''ஹலோ! எப்படிம்மா இருக்கே?''

''கோபமா இருக்கேன். நீங்கதானே எனக்கு ட்ரீட் செஞ்சது?''

''ஆமாம். வாட் ஈஸ் ராங்?''

''டாக்டர், நகக்கீறலைப் பார்த்தீங்க தானே. உதட்டுக் காயத்தைப் பார்த்தீங்க தானே. அட்டெம்ப்ட் டு ரேப்ன்னு புரியலை உங்களுக்கு? என்னை நீங்க எப்படி அட்மிட் பண்ணலாம்?''

டாக்டர் வெலவெலத்துப் போய்ப் பார்க்க.....

''டாக்டர், எனக்கு என்ன ட்ரீட்மெண்ட் கொடுத்தீங்க, நீங்க அப்சர்வ் செஞ்ச காயங்கள் என்னென்னன்னு ஒரு ரிப்போர்ட் கொடுக்க வேண்டி வரும். மே ஐ யூஸ் யுவர் டெலிபோன் ப்ளீஸ்?''

ரிசீவரைக் கையில் எடுத்து, ''இந்த ஏரியா போலீஸ் ஸ்டேஷன் நம்பர் என்ன தெரியுமா?'' கேட்டுக் கொண்டே டைரக்டரி புரட்டினாள் வந்தனா.

அரவிந்த் குளித்து முடித்து உடையணிந்தான். அலுவலகத்திற்குச் செல்லும் நோதில் புறப்பட்ட போது டெலிபோன் ஒலித்தது. எடுத்தான்.

''ஹலோ அரவிந்தா, நான் சிவராம் பேசறேண்டா.''

''வணக்கம்ண்ணா. எங்கேர்ந்து பேசறீங்க?''

''ஏர் போர்ட்லேர்ந்து பேசறேன். ஒரு முக்கியமான வேலையா வந்தேன். வண்டி அனுப்பறியா? ஆபீஸ் போய்டாதே. வீட்லயே இரு. கொஞ்சம் பேசணும்.'' என்றார் டெல்லியில் வசித்த அரவிந்தின் அண்ணன்.

''சரி'' என்று வைத்து விட்டு நிமிர்ந்த போது... வீட்டிற்குள் அந்த போலீஸ் சப்–இன்ஸ்பெக்டர் வந்து, ''நீங்கதானே மிஸ்டர் அரவிந்த்?'' என்றார்.

''ஆமாம்'' என்றான் குழப்பமாக.

''கொஞ்சம் ஸ்டேஷன் வரைக்கும் வர வேண்டியிருக்கும் சார். வந்தனாங்கற பொண்ணு உங்க மேல கற்பழிக்க முயற்சி செஞ்சதாப் புகார் கொடுத்திருக்காங்க'' என்றார் சப்–இன்ஸ்பெக்டர்.

(தொடரும்)

உணவுகள் பல வகை. அதில் சுவை கூட்டி சுகம் பெற
ஒரே சுவை நாபெட் இன்சுவை ரகங்கள்.

nafed

"சுவை மன்னர்கள்"




**NAFED PROCESSED FOODS**

"Cresent Court" 2nd Floor, 963, Poonamallee High Road,
Madras-600 084. Phone: 665851. Telex: MS-7472.



• ஹரீஸ் — சோனியா: படத்தில் இருப்பவரை நேரில் பார்க்க முடியவில்லையே!



• ராம்கோபால் வர்மா — சுயம்பு!



• கலா: ஆட்டுவித்த பெருமை!



• ரகுமான்—ஜெயபால்—சிந்து: மாற்றிவிட்டார்கள்!

# புதிய டைரக்டர்கள் உதயம்!

## சினி பிட்ஸ்:

●● பரபரப்பாகப் பேசப்படுகின்ற படம் 'உதயம்'! வெற்றிக்கு முக்கிய காரணம் ராம்கோபால்வர்மா என்ற இருபத்தி எட்டு வயது இளைஞர். பி. ஈ. முடித்திருக்கிறார். ஒரு சுயம்பு! யாரிடமும் அஸிஸ்டெண்டாகப் பணிபுரியாமல் நேரடியாக டைரக்டராக சினிமாவில் கால் வைத்தவர். நிறைய ஆங்கிலப் படம் பார்ப்பாராம். ஷாட் அமைப்பு, சீன் தேர்வு என்று ஒவ்வொன்றையும் திரையிலே உற்றுப் பார்த்துப் படித்துக் கொண்டார். அப்பா ராஜுவைப் பார்க்க (சவுண்ட் இஞ்சினியர்) அடிக்கடி ஸ்டுடியோவுக்குப் போய் வந்து கொண்டிருந்த வர்மாவுக்குச் சில தொழில் நுட்பங்கள் புரிந்து போயிற்று! பிறகு? அன்னபூர்ணா ஸ்டுடியோஸ் நிறுவனம் வர்மாவின் திறமையையும் சினிமா தாகத்தையும் புரிந்து கொண்டு வாய்ப்புக் கொடுக்க, ராம்கோபால்வர்மா டைரக்டராக 'உதய'மாகி விட்டார்! 'உதயம்' படத்தின் டைரக்ஷனோடு சண்டைக் காட்சிகளையும் இவரே அமைத்திருக்கிறார். 'உதயம்' தெலுங்கில் ஹிட் ஆனவுடன் தமிழில் எடுத்தார்கள். தமிழிலும் ஹிட். தற்போது இந்தியில். இதிலும் ராம்கோபால்வர்மாதான் டைரக்டர்!

●● மலேசியா வாசுதேவனுக்கு ரொம்ப நாட்களாக ஓர் ஆசை! ஒரு படத்தை டைரக்ட் பண்ணிப் பார்க்க வேண்டும் என்றுதான். ஆசை நிறைவேறியது. ''நீ சிரித்தால் தீபாவளி'' படத்தின் மூலம் இயக்குனராகி விட்டார்! படத்தின் நாயகி சோனியா! இந்த இடத்தில் சோனியா பற்றி ஒரு வரியாவது சொல்ல வேண்டும் என்று அவரைத் தேடினால்... ஆளே காணோம் என்கிறார்களே?

●● பிலிம் இன்ஸ்டிடியூட்டில் படித்து 'டைரக்டர்' பட்டம் பெற்ற கே. ஜெயபால் 'நான் உன்னைக் காதலிக்கிறேன்' என்று சினி ஃபீல்டையே பத்து வருடங்களாகச் சுற்றிச் சுற்றி வந்திருக்கிறார் — மனம் தளராமல். இப்போதுதான் பச்சை சிக்னல் கிடைத்திருக்கிறது. ''நான் உன்னைக் காதலிக்கிறேன்'' படத்தை இயக்கும் வாய்ப்பினைப் பெற்றிருக்கிறார். முழுக்க முழுக்க லவ் ஸ்டோரியாம்! படத்தின் ஹீரோ ரகு(மான்); நாயகியாக சிந்துவை ஒப்பந்தம் பேசி, பின்பு மாற்றி விட்டார்கள்!

●● சிவாஜி கணேசன் நடித்த 'சிரஞ்சீவி' படத்தில் துவங்கி பாலச் சந்தரின் 'புதுப்புது அர்த்தங்கள்' வரை ஐம்பது படங்களுக்கு டான்ஸ் மாஸ்டராக ஒர்க் பண்ணியிருக்கிறார் இருபத்து மூன்று வயது இளம் டான்ஸ் மாஸ்டர் கலா. பதினெட்டு வயதில் டான்ஸ் மாஸ்டராக ஃபீல்டில் நுழைந்த கலா, கமல், ரஜினி, பிரபு, சத்யராஜ், கார்த்திக், ராம்கி, என்று எல்லோரையும் ஆட்டுவித்த பெருமைக்குரியவராகிறார். இத்தனை இளம் வயசிலே தமிழ் சினிமாவில் டான்ஸ் மாஸ்டராக வேறு யாரும் பிரகாசித்ததே இல்லையாம்!

— எஸ். பாலு

# அணைக்கும் கரங்கள்!

தீயணைப்புத் துறை கட்டுப்பாட்டு அறையில் போன் ஒலித்தது. எடுத்துப் பேசினார் அதிகாரி தர்மலிங்கம். தண்டையார்பேட்டையில், ஆஸிட் சுமந்து சென்ற லாரியில் கசிவு ஏற்பட்டு, சாலையெல்லாம் அமிலம் பரவி விட்டதாகச் செய்தி! உடனே அவ்விடத்துக்கு அருகாமையில் உள்ள தீயணைப்பு அலுவலகத்துடன் தொடர்பு கொண்டார் தர்மலிங்கம். சுறுசுறுப்பாக இயங்கினர் தீயணைப்புத் துறையினர். கசிந்த ஆஸிட் மீது தண்ணீர் ஸ்ப்ரே செய்து, அதன் வீரியத்தைக் குறைத்தனர். பிறகு அதன் மீது மண் தூவி, அந்தப் பக்கம் போவோர் வருவோரின் கால்களுக்கு ஆபத்து ஏற்படாமல் காத்தனர்.

''தீ விபத்துக்கள் தவிர வேறு பல சந்தர்ப்பங்களிலும் இந்தப் 'படை' பொது மக்களுக்குக் கை கொடுக்கிறது போலிருக்கிறதே'' என்று கேட்ட போது, பல சம்பவங்களைக் குறிப்பிட்டார் தர்மலிங்கம்:

''கொட்டிவாக்கம் எம். ஜி. ஆர். நகரில், பாதாளச் சாக்கடை அடைப்பை விடுவிக்க அதனுள் இறங்கினார்கள் இரண்டு தொழிலாளர்கள். இவர்கள் நெடுநேரம் சென்றும் வெளியே வராதது கண்டு, தீயணைப்புப் படையின் உதவி கோரப்பட்டது. படையினர் பாதுகாப்புச் சாதனங்களுடன் சாக்கடைக்குள் இறங்கி அந்த இருவரையும் காப்பாற்றினர்.

''சிவகாசி – விருதுநகர் பாதையில் போய்க் கொண்டிருந்த தீப்பெட்டித் தொழிற்சாலை 'பஸ்' ஒன்று, அங்கு பெய்த பெரு மழையின் காரணமாக வெள்ளத்தில் மாட்டிக் கொண்டது. பயணிகள் பதினைந்து பேர் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு பஸ்ஸின் கூரை மேல் ஏறி உட்கார்ந்திருந்தார்கள். சிவகாசி தீயணைப்புப் படைக்குச் செய்தி எட்டியதும் வெள்ளத்தில் சிக்கிக் கொண்ட பதினைந்து பேரும் மீட்கப்பட்டனர்.



• ...கீழே இறக்க பயற்சி

''கால்நடைகள் உள்ளே வராமலிருக்க சில வீட்டு கேட் அருகே பூமியில் இரும்புக் குழாய்கள் பதித்திருப்பார்கள். இரு குழாய்களுக்கிடையே தெரியாத்தனமாகக் கால் வைத்துச் சிக்கிக் கொண்ட ஏராளமான ஆடு மாடுகளை மீட்டிருக்கிறோம். பள்ளத்தில் விழுந்து வெளியேற முடியாமல் தவிக்கும் மாடுகள், கிணற்றுக்குள் தவறி விழுந்து விட்ட நாய், பூனைகள் என்று எத்தனையோ பிராணிகளைக் காப்பாற்றியிருக்கிறோம்.

''ஆட்டோமாடிக் பூட்டுகள் கொண்ட கதவுகளைச் சாத்தி விட்டுத் திறக்கத் தெரியாமல் தனியறைக்குள் அல்லது வீட்டுக்குள் மாட்டிக் கொண்ட குழந்தைகளைக் காப்பாற்ற, கதவை உடைத்துச் சேதமாக்காமல் பாத்ரூம் வென்டிலேட்டர் வழியே உள்ளே



• மயக்கமுற்றவரை உயரத்திலிருந்து...




• நடைமுறைப் பயிற்சியில் குடிசைக்குத் தீப்பிடித்தால் என்ன செய்ய வேண்டும் என்று அறிவிக்கப்படுகிறது...

சென்று தாம் இறந்திருக்கிறோம்.

"உயரமான கூரை மேல் ஏறிக் கொண்டு 'இறங்க மாட்டேன்' என்று அடம் பிடிக்கும் மன நோயாளிகளைக் கூட கீழே இறக்கியிருக்கிறோம்.

"இதெல்லாம் போதாததற்குச் சினிமா, காட்சிக்காகத் தீயணைப்பு எஞ்சின் ஹோஸ் கொண்டு "மழை" பொழிவதுமுண்டு!"

முன்பெல்லாம் அந்தந்த முனிசிபாலிடியின் கீழ் தீயணைப்பு நிலையங்கள் இயங்கின. இப்போது அப்படி அல்ல. மாநில முழுதுக்கும் ஓர் இயக்குனர்; திருச்சி, மதுரையில், உதவி இயக்குனர்கள்; பதினைந்து பிரிவுகள் என்று ஒருங்கிணைந்த அமைப்பாக உள்ளது தீயணைப்புத் துறை. இப் படை எப்படிச் செயல்படுகிறது....? தங்கசாலையில் உள்ள தீயணைப்புப் பயிற்சிப் பள்ளி அதிகாரி ஜோசப் சூரியன் சொல்கிறார்:

"செய்தி கிடைத்த இருபதாவது வினாடிக்குள் வண்டி நிலையத்திலிருந்து புறப்பட்டு விடும். படையினர் யூனிஃபார்ம் அணிவது, தொப்பி அணிவதெல்லாம் ஓடும் வண்டியில்தான். தீயின் தன்மையையும் புகையின் நிறத்தையும் பொறுத்து, தீயணைப்பு முறையைக் கையாள்வோம். மின்சார ஷார்ட் சர்க்யூட் காரணமாகத் தீப் பிடித்தால் தண்ணீர் உபயோகிக்க முடியாது. மணல் அல்லது கார்பன்—டை—ஆக்ஸைடு பயன்படுத்துவோம். எண்ணெயினால் ஏற்பட்ட தீ எனில் ஃபோம் நுரையைக் கொண்டு அணைக்க வேண்டும். எரிவாயு கசிவால் ஏற்பட்ட தீ என்றால் உலர்ந்த கெமிகல் பவுடரும் சில சமயங்களில் டி.சி.பி. எனப்படும் ஸ்பெஷல் மெட்டல், அலுமினியம் போன்றவையும் பயன்படுத்துவதுண்டு. எண்ணெய் காரணமாகத் தீப் பற்றியிருந்தால், புகை அழுத்தமான கருமை நிறத்தில் இருக்கும். ஆசிட் எனில் பிரௌன் நிறம், குளோரின் என்றால் பச்சை கலந்த மஞ்சள் நிறம் என்று புகையின் நிறம் வேறுபடுவதைக் கவனித்து அதற்கேற்றபடி அணைக்கும் நடவடிக்கையில் இறங்குவோம். வீடுகளில், காய்ந்த தென்னை ஓலை மின் கம்பியுடன் உரசுவதாலும், குப்பை கொட்டும் இடங்களில் நச்சு வாயு வெளிப்படுவதாலும் கூடத் தீப் பிடித்துக் கொள்வதுண்டு. புகை அதிகமாக உள்ள இடங்களில் நுழைந்து உயிர்களைக் காப்பாற்ற வேண்டி வரும். அப்போது மூச்சு விடுவதற்கு உதவும் முகமூடி போன்ற சாதனம் அணிந்து செல்



* பாதுகாப்புக்காக அணியும் 'மெட்டல்' உடை

வோம். தீப்பிடிக்காத அலுமினிய உடையோடு எரியும் குடிசைக்குள் புகுந்து, சிக்கிக் கொண்ட ஆட்களைக் காப்பாற்றுவோம்..."

"இந்தச் சாகசச் செயல்களையெல்லாம் செய்வதற்குக் கடும் பயிற்சி தேவைப்படுமே?"

"ஆமாம். ஒவ்வொரு நாளும் காலை ஆறரை மணிக்கே பயிற்சிப் பள்ளி மாணவர்களுக்குப் பயிற்சியைத் தொடங்கி விடுகிறோம். மதியம் சிறிது இடைவேளைக்குப் பிறகு பயிற்சி மாலை வரை நீடிக்கும். எஸ்.எஸ்.எல்.சி. தேறியுள்ளவர்கள் இப்பள்ளியில் சேரலாம். பயிற்சி முடிந்த பிறகு, விரும்பினால், நாக்பூரில் உள்ள தீயணைப்புப் பயிற்சிக் கல்லூரியில் 'ஃபயர் இஞ்ஜினியரிங்' இல் டிப்ளமா படிப்போ அல்லது ஐந்து வருட பி.ஈ. படிப்போ படிக்கலாம்.

"இந்தப் பயிற்சியில் மனோதிடம், கட்டுப்பாடு ஆகியவற்றுக்கு நிறைய முக்கியத்துவம் கொடுப்போம். இப் பணிக்கு வர விரும்புவோர் உயிர்த் தியாகம் செய்யவும் தயாராய் இருக்க வேண்டும். தவிர, அன்றாட வாழ்க்கையிலும் அவர்கள் நிறையத் தியாகங்கள் செய்ய வேண்டியிருக்கும். சினிமா அல்லது சலூனுக்குப் போனால் கூட, தாங்கள் செல்லும் இடத்தின் முகவரியைக் கொடுத்து விட்டுப் போக வேண்டும். எந்த நேரமும் அவர்களை அழைப்பதற்கு அவசியம் ஏற்படலாம் அல்லவா!"

தீரம் மிக்க இப்படையினருக்குச் சம்பள விகிதம் குறைவாக நிர்ணயிக்கப்பட்டிருப்பதாக ஒரு பரவலான மனத்தாங்கல் உள்ளது. ஐந்தாவது சம்பளக் கமிஷனில் கூட இந் நிலை தொடர்கிறதாம்!

சம்பளம் குறைவென்றாலும் இவர்களைப் போற்றி மகிழ்வதற்கு ஒன்றும் குறைவில்லை! நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் பம்பாயில், கப்பல் ஒன்றில் ஏற்பட்ட பயங்கர தீ விபத்தில் ஏராளமான தீயணைப்புப் படையினர் உயிரைக் கொடுத்துப் பணியாற்றியதன் நினைவாக, ஒவ்வொரு ஆண்டும் ஏப்ரல் 14 ஆம் தேதி தீயணைப்புப் படை நாளாகவே கொண்டாடப்படுகிறது!

பி.கு.:

ஐம்பதடி உயரத்துக்கு மேற்பட்ட கட்டடங்கள் எனில் எம்.எம்.டி.ஏ. அனுமதியோடு தீயணைப்புத் துறை அனுமதியும் பெற வேண்டும் என்று விதி உள்ளது. இந்தக் கட்டடங்களில் தீ விபத்து ஏற்பட்டால் வெளியேறத் தனி வழி அமைக்க வேண்டுமாம். எத்தனை கட்டடங்களில் இது கடைப்பிடிக்கப்படுகிறதோ?

— சாருகேசி

வண்ணப்படம், புகைப்படங்கள்:
யோகா







— ஏ. ஆர். வீரராகவன்

கவிதைக்குள்
ஒரு கவிதை!



"நதியில் விளையாடி கொடியில்
தலைசீவி
நடந்த இளந்தென்றலே!"

# கண்ணதாசனின் வைர வரிகள்!

கண்ணதாசனின் வைர வரிகள் பல வற்றுள் கோகினூராக ஜொலிப்பவை இவை.

தலைவன் தன் மழலையை மெல்லிய பூவினும் மென்மையாக நினைக்கிறான். தன் மழலை துயில்வதற்கு இயற்கையைத் துணைக்கழைக்கிறான்.

காலம் மாறினும், காவியம் மாறினும் மாறாதது இயற்கை. இயற்கையின் அழகை இயற்கைக்குத் தெரியப்படுத்துகிறார் கவிஞர் கண்ணதாசன்!

தென்றலைத் தாய்க்கு ஒப்பிடுகிறார். தாய்த் தென்றலுக்கும், தந்தைத் தென்றலுக்கும் ஒரு குழந்தையினைப் பெற்றுத் தருகிறார். பிறந்த குழந்தைக்குப் பெயர் சூட்டு விழாவையும் அவரே நடத்தி, "இளந்தென்றல்" என்று அழைக்கிறார்.

அந்தக் குழந்தையின் ஆரம்ப வாழ்வு எப்படி இருக்கிறது? கொடித் தோழி தலைசீவ நடை மைதானத்தில் செல்கிறானாம்! ஓடினால் தவறி விழ நேரும் என எண்ணி, நடப்பதைக் குறிப்பது இலக்கிய நயத்தின் ரசனைக்குச் சான்று.

தமிழ் இலக்கியத்தில் உவமை என்பது உயர்வான ஒரு விஷயம். தலைவனைத் தென்றலாகவும், தலைவனுக்குப் பிறந்த மழலையினைத் தென்றலுக்குப் பிறந்த மதலையாகவும் சித்திரித்து, உவமை நயத்தை வெளிப்படுத்தும் போது, சங்க காலத்தோடு கண்ணதாசன் கைகோத்து நடந்து செல்வதைப் பார்க்க முடிகிறது.

முக்கனிக்கும் மேலாய்த் தித்திக்கும் சங்கீத வரிகள்!

— பல்லாவரம் ராகவன்





# நல்லகாலம் பொறந்தாச்சு

ஒரு ரயில் விபத்தில் கண்ணும் கணவனும் பறிபோன நிலையில், பெற்ற மகனை ஆளாக்குகிறாள் அந்தத் தாய். தன் தாய்க்குப் பார்வை திரும்ப வேண்டும் என்பதற்காகவே உழைத்துச் சம்பாதிக்கும் உத்தமபுத்திரனாய் வளர்கிறான் பிள்ளை. இறந்து விட்டதாய் நினைத்த தந்தையைத் தன் தாய்க்குக் கண்தானம் செய்யத் தயாராய் இருக்கும் தூக்குக் கைதியாய்ச் சந்திக்கிறான். அவர் மேல் அபாண்டக் கொலைப் பழி விழுந்தது என்று நிரூபித்து, அதற்குத் துணை செய்த பெண் காவல் அதிகாரியைக் கைப்பிடித்து, தாய்க்குப் பார்வையும், பொட்டும் திரும்பக் கிடைக்கச் செய்து... இதுக்கு மேல ஆசைப்படலாமோ? ஒப்புக்க வேண்டியதுதான் — நல்ல காலம் பொறந்தாச்சு!

தாயிடமே காசு மோசடி பண்ணுகிற மாதிரி காட்டி, அதை நம்பி அன்னை சுஜாதாவும், 'நேர்மையும் ஒழுக்கமும் நிறைஞ்ச பிள்ளையா வளருவான்னு பார்த்தா, இப்படி அம்மாகிட்டேயே பொய் சொல்றவனா வளர்ந்துட்டானே!' என்று புலம்புவதும், அதைக் கேட்டு ரோஷப்பட்டு ஒரு பெட்டியைத் தூக்கி வந்து கொடுத்து, 'இதுக்குள்ள என்ன இருக்கு பாருங்க. நீங்க மோசடி செய்ததாச் சொன்னீங்களே அந்தப் பணம்தான். எனக்குக் கல்யாணம் வேணாம்னு தட்டிக் கழிக்கறேனே, எதுக்கு? அம்மா, எனக்கு வரப் போற மனைவியை நீ உன் கண்ணால பார்த்து, அப்புறம் எங்களை ஆசிர்வதிக்கணும்னுதான்,' என்று கண்கலங்கி இதயத்தைத் தொடுகிறார் பிரபு.

ரம்யாவுக்குக் கதாநாயகி அந்தஸ்து. தாக்குப்பிடிக்கிறாரா? பிரபு துணையில் பிடிக்கிறார்.

பார்வை கெட்ட பாவத்தில் மெலிந்த சுஜாதா, பிதுக்கும் மகிழ்ச்சியில், அதிர்ச்சியில், துக்கத்தில் — ஆச்சரியம், அந்தக் கண்கள் சுரணைகெட்டே கிடக்க, மற்ற அசைவுகளில் உணர்ச்சிகளை எப்படி வெளிப்படுத்த முடிகிறது? தேர்ந்த நடிகை.

ராஜேஷ் ஏதோ கவிஞராம். செய்யாத குற்றத்தைத் திருதிருவென்று விழித்தபடி ஏற்றுக் கொள்வது ராஜேஷுக்கு ரொம்பக் கைவந்த கலை. இதிலும் அதுதான். கடைசி நேரத்தில் நொண்டிக் கொண்டு வருகிறார்.

பிரபுவுக்கு ஆப்த நண்பனாய் வரும் செந்தில் சிரிப்பூட்ட வேண்டும் என்று செய்யும் சேட்டையிலெல்லாம் ஒரு விபத்தும் நேரவில்லை.

இசையமைப்பில் பழமை வாடை.

சாத்தியக்கூறுக்கு எட்டாத சம்பவங்கள், செயற்கையான செட்டிங்குகள், இப்படிச் சில குறைகள் பின்னுக்கு இழுத்தாலும், இப்போது நடமாடும் 'திரைக் காவிய'ங்களில் இதன் ராகம் வித்தியாசப்படுவதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

புத்தாண்டு வாழ்த்துச் சொல்கிற மாதிரி மங்களமாய் ஒரு தலைப்பு விரித்தார்களே, முதலில் அதற்கு நன்றி சொல்லணும்!

— பி. எஸ். எஸ்.



**சிறுசேமிப்புத்துறை**

# சேமிப்பின் மூலம் பிரமிக்கத்தக்க பரிசுகள்!

**சிறுசேமிப்பில் முதலீடு–**
**வருமானவரியிலிருந்து**
**பாதுகாப்பு!**
குறிப்பிட்ட அளவு
'C' வரிசை பரிசுக்கூப்பன்களே
உள்ளன.

**பரிசுப் பொருட்களின் விவரம்:**

| | |
|---|---|
| 1 சூப்பர் பம்பர் பரிசு | - காண்டஸா கார் |
| 1 முதல் பரிசு | - மாருதி கார் |
| 5 இரண்டாவது பரிசுகள் | - ஹீரோ ஹோண்டா மோட்டார் சைக்கிள் |
| 10 மூன்றாவது பரிசுகள் | - கலர் டிவி |
| 20 நான்காவது பரிசுகள் | - 165 லிட்டர் ரெப்ரிஜிரேட்டர் |
| 100 ஐந்தாவது பரிசுகள் | - 7½ லிட்டர் பிரஷர் குக்கர் |
| 500 ஆறுதல் பரிசுகள் | - குவார்ட்ஸ் கலர் கடிகாரம் |

- தேசிய சேமிப்பு பத்திரம் 8வது வெளியீடு
- தேசிய சேமிப்பு திட்டக் கணக்கு-1987
- பொது சேமநலநிதி
- இந்திரா சேமிப்பு பத்திரம்
- விவசாயிகள் சேமிப்பு பத்திரம்
- மாதாந்திர வருமானத் திட்டம்
- அஞ்சலக குறித்தகால முதலீடு

மேற்கண்ட சிறுசேமிப்புத் திட்டங்களில் ரூ.1000/- முதலீடு செய்வதன் மூலம் கிடைக்கும் வட்டியுடன் இலவச பரிசுக் கூப்பனை பெற்றிடுங்கள். இத்திட்டத்தில் எல்லா தனிநபர்களும் முதலீடு செய்யலாம்.

## தேசிய சேமிப்பு திட்டக்கணக்கு-87ல் ரூ.30,000/- வரை முதலீடு செய்து




## வருமான வரி விலக்கு பெறலாம்.

வருமான வரிச்சட்டம் 80CCA பிரிவின் கீழ் முதலீட்டிற்கு 100% வரிச்சலுகை. இந்த வரிச்சலுகை 80C பிரிவின் கீழ் கிடைக்கும் வரிச்சலுகையுடன் சேர்த்தும் பெறலாம்.

**இயக்குநர், சிறுசேமிப்புத்துறை**
143, அண்ணா சாலை, சென்னை-600 002.
தொலைபேசி: 840223/846209/840003.

அணுகவும்:
- அனைத்து அஞ்சலகங்கள்
- ஆட்சியர் அலுவலகங்கள்
- வட்டாட்சியர் அலுவலகங்கள்
- ஊரக வளர்ச்சித்துறை அலுவலகங்கள்.

DIPR/199/MS/90/ARIES

# இலக்கை நோக்கி...

குருவை ஆபீஸ் வாசலிலேயே பார்த்து விட்டான் சத்தியமூர்த்தி. அவனிடம் நெருங்கி வந்து தன்னை அறிமுகப்படுத்திக் கொண்டான். ''கங்கிராஜுலேஷன்ஸ்'' என்றான் குரு. ''வாங்க, முதலில் பி. டி. ஓ.வைப் பார்த்துடலாம்'' என்று சொல்லி அவனை அழைத்துப் போனான்.

வட்டார வளர்ச்சி அலுவலர் (பி.டி.ஓ.) முன்னால் போய் நின்றனர் இருவரும். ''சார் தான் நம்ப பி. டி. ஓ. சார், நம்ப ஆபீஸில் புதுசா சேர்ந்திருக்கிற ஊர்நல அலுவலர் சத்தியமூர்த்தி''. சத்யாவும் பி. டி. ஓ. வும் கைகுலுக்கிக் கொண்டார்கள். சத்யா ஒரு எலுமிச்சைப் பழத்தை அவர் கையில் கொடுத்தான். வாங்கிக் கொண்டார்.

''இன்னைக்கே ஜாயின் பண்றீங்களா?'' என்றார் பி. டி. ஓ.

''ஆமாம் சார்.''

''அப்ப சரி, குரு. தம்பியை மானேஜர் கிட்ட அழைச்சிட்டுப் போய் ஜாயினிங் ரிப்போர்ட் எழுதிக் கொடுத்துடச் சொல்லு.''

குருவும், சத்யாவும் வெளியே வந்தார்கள். அடுத்த அரை மணி நேரத்தில் ஆபீஸ் முழுவதும் தெரிந்து போயிற்று.

மானேஜர்தான் மிகவும் ஆச்சரியப் பட்டுப் போனார். சத்யாவை உட்கார வைத்து மரியாதையாகப் பேசினார். ''பரவாயில்லை. சின்ன வயசிலேயே வேலை வாங்கிட்டியே... ஏதாவது காசு கீசு செலவாச்சா?'' குரலைத் தாழ்த்திக் கொண்டார். மூக்குக் கண்ணாடி வழியே அவனை ஊடுருவிப் பார்த்தார்.

''எதுக்குக் கேக்கறேன்னா, என் பையன் ஒருத்தன் எம். எஸ். ஸி. படிச்சுட்டுச் சும்மா சுத்திட்டு இருக்கான். அதுக்குத்தான்... அப்படி ஏதாவது இருந்தால் கூச்சப்படாம சொல்லு. எங்களுக்கும் வழிமுறையெல்லாம் சொல்லித் தாங்கப்பா...'' அவனைப் பெரிய மனிதனாக்கினார்.

''அதெல்லாம் எதுவுமில்லை சார்.'' கூச்சமாகப் புன்னகை செய்தான் சத்யா.

சத்யா மொத்தம் ஆறு கிராமங்களைப் பார்த்தாகவேண்டும். அரசாங்கக்கடன்களுக்காக வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ளவர்களைத் தேர்வு செய்து அவர்கள் மான்யம் பெறப் பரிந்துரை செய்ய வேண்டும். சாண எரிவாயுக் கலன் அமைக்க மக்களுக்கு உதவி செய்ய வேண்டும். சிறுசேமிப்பு மகசூலில் கலந்து கொள்ள வேண்டும்; சத்துணவு மையங்களைப் பார்வையிட்டு அறிக்கைகளை அலுவலகத்தில் ஒப்படைக்க வேண்டும். ஆக, கிட்டத்தட்ட ஒரு மக்கள் தொடர்பு அலுவலர் மாதிரிதான் இவனும்.

வந்த ஒரு வாரத்திலேயே வேலை மிகவும்



'தபசி'

பிடித்துப் போயிற்று சத்யாவுக்கு.

அந்தச் சத்துணவுக் கூடத்தின் முன் சத்யா சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்திய போது மணி சரியாகப் பகல் பன்னிரண்டு. வெயில் உச்சத்தை எட்டியிருந்தது. சத்யாவுக்கு மூச்சு வாங்கியது. முகத்தில் வழிந்த வியர்வையைத் துடைத்துக் கொண்டான். சைக்கிள் கேரியரில் வைத்திருந்த டைரியை எடுத்துக் கொண்டு உள்ளே சென்றான்.

உள்ளே 'வெறிச்'சென்று இருந்தது. யாரையுமே காணவில்லை. சத்யா திரும்பிப் பார்த்தான். தூரத்தில் யாரோ ஒரு பெண் அவனை நோக்கி வேகமாக வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அவள், அவன் அருகில் வந்ததும் இடுப்பில் தூக்கிச் செருகியிருந்த புடைவையை இறக்கி விட்டு, ''வணக்கம் சார்...'' என்றாள் இரு கைகளையும் கூப்பிய படி.

''யாரும்மா நீங்க?''

''சத்துணவு அமைப்பாளர் சார்... இங்கே பக்கத்தில்தான் வீடு. நெல்லு இடிச்சுட்டிருந்தேன். சாரைப் பார்த்ததும் யாரோ எவரோன்னு ஓடியாந்துட்டேன். சாரு...'' என்று இழுத்தாள்.

''கிராம சேவக்மா'' என்றான் சத்யா.

''உட்காருங்க சார்...'' பெயிண்டை எப்போதோ மறந்து விட்டிருந்த ஒரு ஸ்கூல் நாற்காலியை முந்தானைத் தலைப்பால் துடைத்து விட்டாள்.

சத்யா உட்கார்ந்தான். பார்வையைச் சுழற்றி ஒரு கணம் அந்த சத்துணவுக் கூடத்தை நோட்டம் விட்டான். மேலிருந்து நன்றாக வெளிச்சம் வந்து கொண்டிருந்தது. மத்தியில் இரண்டும் ஓரத்தில் மூன்றுமாக மொத்தம் ஐந்து ஆஸ்பெஸ்டாஸ் தகடுகள் அழகாகக் கழற்றப்பட்டிருந்தன. கூடத்தின் ஒரு மூலையில் சிலந்தி ஒன்று கூடு கட்டியிருந்தது. கீழே தட்டு முட்டுச் சாமான்கள். குழந்தைகளுக்குச் சாப்பாடு போட அலுமினியத் தட்டுகளும், டம்ளர்களும். மற்றொரு மூலையில் காய்ந்த இலைச் சருகுகள் குவித்து வைக்கப்பட்டிருந்தன. 'எதற்கு' என்று கேட்ட போது, அடுப்பு எரிக்க என்றாள் அந்தப் பெண்மணி.

கருப்பும், சிவப்புமாக இரண்டு நாய்கள் நாக்கைத் தொங்கப் போட்டுக் கொண்டு கூடத்தின் வாயிலிலேயே நீட்டிப் படுத்துக் கொண்டிருந்தன. தரையெல்லாம் ஒரே குப்பை மயம். 'தண்ணீரைக் காய்ச்சிக் குடிக்கவும்' என்ற ஒரு போர்ட் தலைக்கு மேலே தொங்கிக் கொண்டிருந்தது. உட்கார்ந்திருந்த நாற்காலிக்கு இடது புறத்தில் அரிசி





என்னுடைய இரண்டு வயது மகன் ஸ்ரீவத்ஸன் அடிக்கடி மண் தின்பான். எவ்வளவோ தடுத்தும் என்னை ஏமாற்றிவிட்டு மண் தின்பான். குழந்தை இந்தப் பழக்கத்தை மாற்ற வேண்டுமானால், அவன் மண் தின்னப் போகும் போதெல்லாம் சிறிது மிளகாய்த் தூளை அவன் நாக்கில் தடவினால், பின்னர் மண் தின்ன மாட்டான் என்று என் தோழி யோசனை கூற, நானும் அதைத் தொடர்ந்து பலமுறை செய்து வந்தேன். நல்ல முன்னேற்றம்! ஆம், குழந்தை இப்போது மண் பக்கமே போவதில்லை. ஆனால் இப்போது விரும்பித் தின்பது மிளகாய்ப் பொடியைத் தான்...! இப்போது இந்தப் பழக்கத்தை மாற்ற யோசித்து வருகிறேன். ஆனால் இனிமேல் யாருடைய யோசனையையும் நாடப் போவதில்லை!

— ஆர். ராஜேஸ்வரி

---

மூட்டையும், பருப்பு மூட்டையும் அடுக்கப்பட்டிருந்தன. எண்ணெயை ஒரு பாத்திரத்தில் ஊற்றி வைத்திருந்தார்கள். எண்ணெயின் மேல் எறும்புகள்.

இதைவிட அசுத்தமான இடம் இருக்க முடியாது என்று தோன்றியது சத்யாவுக்கு. உள்ளே எட்டிப் பார்த்தான். தடுப்புச் சுவருக்குப் பின்புறம் சமையல் நடந்து கொண்டிருந்தது. ஒரு பெண்மணி (இவள் ஆயா) சோற்றைக் கரண்டியால் கிண்டியபடி இருந்தாள்.

அமைப்பாளரைப் பார்த்து, "இன்னொரு ஆயா வரலையா?" என்றான் சத்யா.

"இல்லை சார்... அவங்க நாத்தனார் பொண்ணுக்குத் தலைப்பிரசவம். நாளைக்கு வந்துடுவாங்க."

"லீவு லெட்டர் ஏதாவது கொடுத்திருக்காங்களா?"

"அதெல்லாம் ஒண்ணும் இல்லை சார்... அவங்க இல்லாதப்ப நாங்களே எல்லாம் பார்த்துப்போம்."

லீவு லெட்டரே தராமல் லீவு எடுத்துக் கொள்வது எப்படி என்பது சத்யாவுக்குப் புரியவில்லை. இது மட்டுமல்ல. எல்லாமே அப்படித்தான் இருந்தது. ரிஜிஸ்டரில் அறுபத்தைந்து குழந்தைகளுக்குப் 'பிரசண்ட்' செய்திருந்தாள் அமைப்பாளர். எண்ணிப் பார்த்தபோது பதினெட்டு தலைகளே தெரிந்தன. அதுவும் எல்லா குழந்தைகளும் ஒரே இடத்தில் இல்லை. ஒரு குரூப் மணலில் விளையாடிக் கொண்டிருந்தது. மற்றொன்று தரையில் படுத்துத் தூங்கிப் போயிருந்தது. பாதி குழந்தைகள் ஜட்டி கூடப் போடாமல் அம்மணமாய் இருந்தன.

"குழந்தைகளையே காணோமே. என்னம்மா இது?"

"இல்லைங்க சார்.. எல்லா குழந்தைகளும் சாப்பாடு போடற நேரத்துக்குக் கரெக்டா வந்துடும்" என்றாள்.

சாப்பாடு நேரத்துக்கு நாற்பது குழந்தைகள் வந்திருந்தன. கணக்கில் இருப்பதோ அறுபத்தைந்து. அலசி அலசிப் பார்த்ததில் ஒன்று கூடத் திருப்தியாயில்லை சத்யாவுக்கு.

"விசிட் ரிஜிஸ்டர் கொடுங்கம்மா."

கொண்டு வந்து கொடுத்தாள் அமைப்பாளர். கையை வைத்தவன் கடகடவென்று எழுத ஆரம்பித்தான். 'இன்று (ஊர் பெயர் போட்டு) சத்துணவு மையம் பார்வையிடப்பட்டது. மையத்தில் அமைப்பாளர் இருந்தார். ஆயா ஒருவர் இல்லை. அறுபத்தைந்து குழந்தைகளுக்கு உணவு எடுக்கப்பட்டு, நாற்பது குழந்தைகளுக்கு மட்டுமே பரிமாறப்பட்டது. மீதித் தொகையை அமைப்பாளர் கட்டவும். சுற்றுப்புறம் படு மோசம். குழந்தைகளுக்குப் பாடங்களும் சரியாகச் சொல்லித் தரப்படவில்லை. மையத்தின் பராமரிப்பில் தீவிர கவனம் செலுத்தவும்.'

ரிஜிஸ்டரைத் திரும்பக் கொடுத்தான்.

"இருபத்தைந்து குழந்தைகளுக்கு 'ரெக்கவரி' போட்டிருக்கேன். ஆபீஸில் வந்து பணத்தைக் கட்டிடுங்க" என்று அமைப்பாளரிடம் சொல்லி விட்டுப் புறப்பட்டான் சத்யா.

மறுநாள் மாலை....

பி. டி. ஓ., சத்யாவை அழைப்பதாகப் பியூன் வந்து சொல்லி விட்டுப் போனான். சத்யா உள்ளே நுழைந்த போது பி.டி.ஓ. ஃபைல்களைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவருக்கு எதிர்ப்புறத்தில் அந்த சத்துணவு அமைப்பாளர் — நேற்று எழுதிக் கொடுத்த விசிட் ரிஜிஸ்டர் அவள் கையில் இருந்தது.

இரண்டு நிமிடம் கழித்து பி. டி. ஓ. தலையைத் தூக்கினார். மிகவும் களைப்பாகத் தெரிந்தார். அப்படியே சாய்ந்து உட்கார்ந்து கொண்டு மூக்குக் கண்ணாடியைக் கையில் எடுத்துத் துடைக்க ஆரம்பித்தார். மேசை மேல் இருந்த ஃபைல்களைப் பியூன் எடுத்துப் போனான். அறையில் வேறு யாருமில்லை.

"நேத்து இவங்க சென்டர் விசிட் போயிருந்தீங்களா?"

"ஆமாம் சார்."

"குழந்தைங்க சரியா இல்லையா?"

"ஆமாம் சார்.. நாற்பது குழந்தைகளுக்கு அறுபத்தைந்துன்னு ரிஜிஸ்டர்லே பதிவு பண்ணியிருக்காங்க. அறுபத்தைந்து பேருக்குச் சாப்பாடு செய்திருந்தாங்க..."

கண்ணாடியைப் போட்டுக் கொண்டார்

பி.டி.ஓ. ''ஏம்மா, அப்படியா?'' என்றார்.

''இல்லைங்க சார்... குழந்தைங்க எப்பவுமே வந்துடும். நேத்து மாரியம்மன் கோயில்லே கஞ்சி ஊத்தினாங்க. அதுதான் பசங்க வரலை'' என்றாள் அமைப்பாளர்.

சத்யாவுக்கு எரிச்சலாக இருந்தது. மேலதிகாரி முன் தான் எதுவும் சொல்லக் கூடாது என்பதனால் பேசாமல் இருந்து விட்டான்.

''இனிமே இப்படியெல்லாம் பண்ணக் கூடாதும்மா'' என்றார் பி. டி. ஓ.

''சரிங்க சார்.''

''ரிஜிஸ்டரை இப்படிக் கொடுத்துட்டுப் போ.''

அவளும் போய் விட்டாள்.

''சத்யா நீங்க வேலைக்குப் புதுசு இல்லையா?'' என்று சொல்லிச் சிரித்தார் பி.டி.ஓ. சட்டென்று முகத்தை சீரியஸாக வைத்துக் கொண்டு, ''இந்த வருஷம் நம்ப குடும்பக் கட்டுப்பாடு டார்கெட் எவ்வளவு தெரியுமில்லை....'' என்றார்.

''நானூறு சார்'' என்றான் சத்யா.

''ம்.... ஞாபகமிருக்குதில்லை. இந்த வருஷத்திலே ஆறு மாசம் ஓடிப் போச்சு. இன்னும் நூத்தி அம்பது கூட நாம செய்யலை. எல்லாம் விளையாட்டா இருக்காங்க. நம்ப பிளாக்தான் நம்ப டிவிஷன்லையே ரொம்ப கம்மி. டி. டி. ஓ. போன மீட்டிங்லே வச்சு வாங்கிட்டார்... இருபத்தேழாந்தேதி கலெக்டர் மீட்டிங்... பீஸ் பீஸா கிழிச்சுடுவார். எல்லா திட்டத்தை விடவும் குடும்பக் கட்டுப்பாட்டுக்குத்தான் நம்ம கலெக்டர் முக்கியத்துவம் தரார். நாம செய்து காட்டணும்.''

இதெல்லாம் எதற்கு இவர் தன்னிடம் சொல்லிக் கொண்டிருக்கிறார் என்று புரியாமல் விழித்தான் சத்யா.

பி. டி. ஓ. தொடர்ந்தார். ''நீங்களும் நானுமா போய்க் குடும்பக் கட்டுப்பாடு கேஸ் பிடிச்சிட்டு இருக்க முடியும்? லேடீஸ் கேஸ் எல்லாம் அமைப்பாளர்கள்தான் ஈஸியா அப்ரோச் செய்ய முடியும்... நாம அவங்களுக்கு ஹெல்ப் பண்ணனும்.''

சத்யா பேசாமல் நின்று கொண்டிருந்தான்.

''ஆமாம் சத்யா... நாமதான் கொஞ்சம் பார்த்து நடந்துக்கணும். கண்டும் காணாம போனாத்தான் நாம டி.டி.ஓ.கிட்டேயும் கலெக்டர்கிட்டேயும் நல்ல பேர் வாங்க முடியும். உங்களுக்குப் புரியும்னு நினைக்கறேன்...'' என்று சொன்னவர் சற்று நேரம் கழித்து மெதுவாக ஆரம்பித்தார். ''அதுவுமில்லாம இந்தப் பொண்ணு ரொம்ப நல்லவ. ஒரு விதத்திலே எங்க ரிலேஷன் கூட. ரொம்ப பயந்த சுபாவம். என்கிட்டே வந்து நின்னுகிட்டு 'ஓ'ன்னு அழுவறா... 'நான் தம்பிகிட்டே சொல்றம்மா'ன்னு சொல்லி ரெக்கவரியை கேன்சல் செய்து அனுப்பிச்சிட்டேன். நீங்களும் நீங்க

# அரிமா சங்கத்தின் அரிய உதவி!




நோய்வாய்ப்பட்டிருந்த சம்பூர்ணத்தின் தாயார் சென்னை ஜி.எச். இல் இறந்து போனார். அவர் சடலத்தை வீட்டுக்குக் கொண்டு போக ஆஸ்பத்திரியின் மார்சுவரி வேன் தயாராய் இருந்தது.... ஆனால் டிரைவரைத்தான் காணவில்லை! ஜி.எச். வளாகத்துள் ஒரு ஆம்புலன்ஸ் டிரைவர் கூட இல்லை! வேறு வழியின்றி, அசோக் நகரில் வசித்த ஒரு ஜி.எச். டிரைவரின் விலாசத்தைத் தேடிப்பிடித்து, அங்கு சென்று, அவரைக் கையோடு அழைத்து வந்து தாயாரின் உடலை வேனில் எடுத்துச் சென்றார் டாக்டர் சம்பூர்ணம்.

இத்தனைக்கும் டாக்டர் சம்பூர்ணம் அரசாங்க மருத்துவ சேவைப் பிரிவின் உதவி இயக்குனர்; அவர் மனைவி டாக்டர் கமலாபாய் சம்பூர்ணம் அதே ஜி.எச். இல் ரேடியாலஜி பிரிவின் கூடுதல் பேராசிரியர்! அப்படி இருந்தும் இரவு ஏழேமுக்கால் மணிக்கு அம்புஜம்மாளின் சடலத்தை வீட்டுக்கு எடுத்துச் செல்ல முயன்றவர்கள் நள்ளிரவுக்கு மேல்தான் அதைச் சாதிக்க முடிந்தது! இந்தச் சம்பவம் நாளிதழ்களில் பெட்டிச் செய்தியாக வெளியாயிற்று.

டாக்டர்களுக்கே இந்தக் கதி என்றால் சாதாரண மக்களுக்கும் ஏழை எளியவர்களுக்கும் இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் எவ்வளவு இக்கட்டு ஏற்படும் என்று சொல்லத் தேவையில்லை.

இத்தகைய இக்கட்டில் உதவத்தான் மைலாப்பூர் லயன்ஸ் கிளப் ஒன்றேமுக்கால் லட்சம் ரூபாய் செலவில் ஒரு மார்சுவரி வேனை ஏற்பாடு செய்திருக்கிறது. ஓட்டுனருடன் இந்த வேன் எப்போதும் தயார் நிலையில் இருக்கும். தேவையானவர்கள் லயன்ஸ் கிளப்புடன் தொடர்பு கொண்டு வேனை உபயோகிக்கலாம். ''ஏழைகளுக்கு உதவி இலவசம்; மற்றவர்கள் வசதிக்கேற்பக் கட்டணம் செலுத்தலாம்'' என்கிறார் லயன்ஸ் கிளப்பின் புராஜக்ட் கமிட்டி தலைவர் எஸ்.வி. வெங்கட்ராமன்.

— ச.வெ.ரா. மோகன்.

கொடுத்த ரிப்போர்ட்டை மானேஜர்கிட்டே இருந்து திரும்ப வாங்கிக்கங்க... அதை சொல்லத்தான் கூப்பிட்டேன். நீங்க போகலாம்.''

பி.டி.ஓ. காலிங்பெல்லை அடித்துப் பியூனைக் கூப்பிட, சத்யா வெளியே வந்தான்.

சத்யா சத்துணவுக் கூடத்தின் முன் சைக்கிளை ஸ்டாண்ட் போட்டு நிறுத்தினான். உள்ளே சென்றான். அதே அமைப்பாளர்தான். இந்த முறை முதலில் இருந்த ஆயா இல்லை. வேறொருத்தி இருந்தாள். கூடத்து மூலையில் காய்ந்து போன சருகுகள் முன்னை விட இப்போது அதிகமாக இருந்தன. முதலில் வெளியே படுத்திருந்த நாய்கள் இப்போது குழந்தைகளுக்குப் பக்கத்தில் தூங்கிக் கொண்டிருந்தன. 'தண்ணீரைக் காய்ச்சிக் குடிக்கவும்' போர்ட் சாய்ந்து போய்த் தொங்கிக் கொண்டிருந்தது.

''என்னம்மா ஆயா இல்லையா?''

''இல்லைங்க சார்... சமயபுரம் போயிருக்காங்க.''

''எத்தனை பேருக்கு இன்னைக்குச் சமையல் செய்தீங்க.''

''அறுபத்தைந்து பேரு சார்.''

எண்ணிப் பார்க்கவில்லை சத்யா. ''விசிட் ரிஜிஸ்டர் கொடுங்க'' என்றான். கொண்டு வந்து தந்தாள் அமைப்பாளர். தன் முத்து முத்தான கையெழுத்தில் அதில் பின்வருமாறு எழுத ஆரம்பித்தான்.

'இன்று சத்துணவு மையம் பார்வையிடப் பட்டது. மையத்தில் அமைப்பாளரும், உதவியாளர்களும் இருந்தனர். அறுபத்தைந்து குழந்தைகளுக்குத் தரமான உணவு வழங்கப் பட்டது. சுற்றுப்புறம் சுத்தமாக இருந்தது. மாணவர்களுக்குத் தமிழும், கணக்கும் சொல்லித் தரப்பட்டது. மையத்தின் செயல் முறை சிறப்பாக உள்ளது. தொடரவும்.''

சத்யா வெளியே வர அவனைத் தொடர்ந்து அந்த அமைப்பாளரும் வந்தாள்.

''அப்ப நான் வரட்டுமா?'' என்றான்.

''சரிங்க சார்...'' பணிவாகச் சொன்னாள் அவள்.

''அந்த மேட்டுப்பட்டு கேஸு வரலையாம்மா?''

''அவங்க வீட்டில் ஏதோ சீமந்தமாம்... 'அடுத்த வாரம் வரேன்' னு சொல்லிருக்குது சார் அந்தப் பொண்ணு.''

''சரி பார்த்து அழைச்சிட்டுப் போங்க. இந்த கேஸை என் பேர்ல போட்டுடுங்க; அடுத்ததை நீங்க போட்டுக்கலாம். என்ன?''

''சரி சார்.''

''வரட்டாமா...'' என்றான் சத்யா சைக்கின் ஸ்டாண்டை தள்ளியபடியே.

''சரிங்க சார்...'' என்றாள் அவள்.



# புள்ளிக் கோலங்களின் பின்னணி என்ன?

## —அமெரிக்கப் பெண் ஆய்வு



மார்த்தா: ''அரிசி மாவுக் கோலங்களே அரிதாகிவிட்டன!''

**ந**மது வீட்டு வாசல்களில் கோலங்கள் போடப்படுவதைப் பார்த்தார், அமெரிக்காவிலிருந்து வந்த ஒரு பேராசிரியை. ஆச்சரியப்பட்டுப் போனதுடன் நில்லாது, ஆராய்ச்சி செய்யவும் ஆரம்பித்து விட்டார்!

நார்த் காரலினா பல்கலைக்கழக நுண்கலைப் பிரிவில் பேராசிரியையாக விளங்கும் மார்த்தா, ஏ. ஸ்டிரான் இந்து சமயம் மற்றும் கலைகள் பற்றிப் பயில நம் நாட்டின் பனாரஸ் ஹிந்து பல்கலைக் கழகத்திற்கு 1977 இல் வந்தார். மூன்று மாத காலப் பயிற்சியினிடையே வெளியே சென்ற போதெல்லாம் அவர் கண்களைக் கவர்ந்தன இந்திய இல்லங்களின் வாசலில் வரையப்பட்டிருந்த கோலங்கள். தாய் நாடு திரும்பியதும் தமது இந்திய நண்பர் ஒருவரிடம் இந்த 'அரிசி மாவுச் சித்திரங்கள்' பற்றிக் கேள்விகள் கேட்டுத் துளைத்து எடுத்து விட்டார். 'எங்கள் நாட்டுப் பெண்கள் தினமும் காலையும் மாலையும் வீட்டு வாசலைச் சுத்தம் செய்து கோலம் போடுவார்கள்' என்பது தவிர அந்த நண்பருக்குக் கோலங்கள் பற்றி எதுவும் சொல்லத் தெரியவில்லை. உடனே தாமே முனைந்து ஆராய்ச்சியில் இறங்கி விட்டார் மார்த்தா. உலகெங்கும் உள்ள நாடுகளில் இந்தியாவைப் போல் கோலமிடும் வழக்கம் உள்ளதா? என்று ஆராய ஆரம்பித்தார்.

**ஹா**ய்டி என்னும் மேற்கிந்தியத் தீவில் வாழும் பழங்குடியினர் - ஆவியுலகத்தோடு தொடர்பு கொள்ளும் பொருட்டுக் கோலங்கள் வரைந்து சில சடங்குகளைச் செய்வார்களாம். அமெரிக்காவில் செவ்விந்திய இனத்து மருத்துவர்கள் கோலம் வரைவதுண்டாம். பலவித வண்ண மணல் துகள்களைக் கொண்டு வரைந்த கோலங்கள் மீது நோயாளியைப் படுக்கச் செய்து மாய மந்திரங்கள் ஓதுவார்களாம்.

''இந்தியாவில் மட்டும்தான் கோலம் அன்றாட வாழ்வில் ஓர் அம்சமாகவும் அழகுணர்ச்சியின் வெளிப்பாடாகவும் திகழ்கிறது'' என்கிறார் கோலங்களை ஆராய மீண்டும் இந்தியா வந்துள்ள மார்த்தா. தமது பணி நிமித்தம் காமிராவும் கையுமாக இந்தியாவின் மூலை முடுக்குகளுக்கெல்லாம் சென்று திரும்பியிருக்கிறார். ஜோத்பூரில் ஒரு பெண் சுண்ணாம்புக் கற்கள் மீது தண்ணீர் தெளித்து அதைத் துணியால் ஒத்தி ஒத்திக் கோலம் போட்ட காட்சி தமது கண்களை விட்டு அகலவில்லை என்கிறார்.

''அந்தப் பெண் தமது விரல்கள் வெந்து போவதையும் பொருட்படுத்தாமல் அற்புதமான கோலம் ஒன்றை வரைந்தார். சில மணி நேரங்களில் கலைந்து போகப் போகிறது என்று தெரிந்தும் எத்தனை சிரத்தையாக உங்கள் நாட்டுப் பெண்கள் கோலம் போடுகிறார்கள்!'' என்று வியந்து போகிறார்.

முக்கு, அனியல், அல்பனா என்றெல்லாம் கோலங்களைக் குறிக்கும் பல்வேறு சொற்கள் இந்தியாவின் பல்வேறு மொழி




''டீ. வி. ல உங்களுக்கு ரொம்பப் பிடிச்ச விஷயம் எது ஸார்?''

''மகாராசன்! டீ. வி. யைக் கண்டுபிடிக்கும் போதே அதை ஆஃப் செய்ய ஒரு ஸ்விட்சைக் கண்டுபிடித்தானே, அது தான்!''

— கார்த்திக்.

களில் உண்டு என்று பட்டியல் போடுகிறார்.

ஐந்து, ஏழு, ஒன்பது என்ற எண்ணிக்கையில் போடப்படும் கோலப் புள்ளிகளின் பின்னணியில் ஏதேனும் எண் சாஸ்திரம் இருக்குமோ என்றும் துழாவிக் கொண்டிருக்கிறார் மார்த்தா. 'புள்ளிகள், குடும்பத்தின் உறுப்பினர்களையும் அவற்றை இணைக்கும் கோடுகள், குடும்பத்தைப் பிணைக்கும் அன்பென்னும் கயிறையும் குறிக்கக்கூடும்' என்று முன்பு ஒருமுறை ரங்கோலி கலைஞர் சாந்தா நாராயணன் கூறியதை அவரிடம் சொன்ன போது, தமது புத்தகத்தில் வெளியிட ஓர் அருமையான தகவல் கிடைத்ததென மகிழ்கிறார்.

''நான் இதுவரை செய்த ஆராய்ச்சியின் முடிவாக, கோலங்கள் இயற்கை வழிபாட்டுச் சின்னங்கள்; அவை பெண்கள் தங்களை வெளிப்படுத்திக் கொள்ளவும் தங்கள் வீடுகளைத் துர்தேவதைகளிடமிருந்து காக்கவும் ஏற்படுத்திய கலைச் செல்வங்கள்; காக்கை குருவிகளுக்கும் மிகச் சிறிய ஜீவராசிகளான எறும்புகளுக்கும் கூட உணவு அளிக்கும் எண்ணத்துடன்தான் அவற்றை அரிசி மாவைக் கொண்டு வரைந்தார்கள் என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். இப்போதெல்லாம் வெகு சில இடங்களில் மட்டுமே அரிசி மாவுக் கோலங்களைப் பார்க்க முடிகிறது — சுண்ணாம்புக் கல் கோலங்கள் பளிச்சென்று இருந்தாலும் அரிசி மாவுக் கோலங்களின் அடங்கிய, முத்துப் போன்ற அழகே தனி இல்லையா?'' என்கிறார் மார்த்தா.

இப்படி அவர் கூறும் போது, 'ஸ்டிக்கர்' கோலங்களில் மெள்ள மெள்ள மூழ்கிக் கொண்டிருக்கும் நமது சோம்பேறித்தனம் மனத்தை உறுத்தத்தான் செய்கிறது.

— நிர்மலா சக்கரவர்த்தி

படம்: யோகா




**RHEUMATOID - ARTHRITIS**

**எல்லா மூட்டுகளிலும் உள்ள வலிக்கு RHEUMATOID - ARTHRITIS (சாவாங்கி) என்று பெயர். இந்த நோய்க்கு மேலை நாடுகளிலும் கூட இன்னும் சரியான மருந்து கண்டு பிடிக்கப்படவில்லை. ஆனால் கோவை தெலுங்கு பாளையம் ஆஸ்பத்திரியில் ஆபரேஷன் இல்லாமல் சரி செய்கிறார் டாக்டர் அர்ஜூனன். மேற்கு ஜெர்மனியை சேர்ந்த ஹெல்டி கார்ட் சாவாங்கி நோயால் பீடிக்கப்பட்டு இங்கிலாந்து, ஜெர்மனி, ஸ்விட்சர்லாந்து முதலிய நாடுகளில் 5 வருஷம் சிகிச்சை செய்து குணமாகாமல் கடைசியில் கோவை தெலுங்கு பாளையம் ஆஸ்பத்திரியில் சிகிச்சை செய்து 52 நாளில் குணமடைந்தார்.**

**ஹெல்டி கார்ட் (வயது 71)**

# ஏழாவது இரவு

16

கதை: **அபர்ணா நாயுடு**

சித்திரம்:

வரவேற்பு ஹாலின் விஸ்தீரணமே மூச்சடைக்க வைத்தது. மிருதுவாகத் தழுவிய ஏ. ஸி. குளிர். சன்னமாக மிதந்து வந்த மேற்கத்திய இசை.

வலது புறம் அரை வட்டமாக அமைந்திருந்த மேசை. ஒரே அச்சில் வார்க்கப் பட்டிருந்த தோற்றத்தில், அதன் பின்னே நின்றிருந்த வரவேற்புப் பெண்கள்.

இடதுபுறம் அங்கங்கே கொத்துக் கொத்தாக சோபாக்கள். அள்ளித் தெளித்தாற் போல அமர்ந்திருந்த வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகள்...

பார்த்துக் கொண்டே சென்ற ரஞ்சனாவுக்குப் பிரமிப்பு ஏற்பட்டது.

சொன்னாள்.




















பேசிக் கொண்டே, நேரெதிரே மேலேறிச் சென்று வளைந்து திரும்பிய படிக்கட்டுகளை அடைந்தார்கள். அதில் நிதானமாக அவர்கள் ஏறிக் கொண்டிருந்த போது—

பின்னே, நுழைவிடத்தில் கூரையை எட்டி நின்ற கண்ணாடிக் கதவு மிருதுவாகத் திறக்க, அவன் உள்ளே வந்து நின்றான். ஒரு நொடி நிதானித்தான். எதிரே படிக்கட்டு வளைவில் அவர்கள் மறைவது தெரிந்தது. அவன் முகத்தில் புன்னகை விரிந்தது. படிக்கட்டை நோக்கி அவசரமில்லாமல் நடந்தான்.

மேலேறிச் சென்ற அவர்கள் கண்ணாடிக் கதவைத் தள்ளித் திறந்து ரெஸ்டாரண்ட்டுக்குள் நுழைந்த போது, அவன் படிக்கட்டுகளில் ஏறிக் கொண்டிருந்தான்.

அவன் பின்தொடர்ந்து வருவதைப் பற்றி எதுவுமே அறியாமல் அவர்கள் ஒரு மேசையை அடைந்து உட்கார்ந்த போது, அவன் அந்தக் கதவை நெருங்கியிருந்தான்...







அப்போது சட்டென விளக்குகள் அணைந்தன. அவர்கள் பின்னாலிருந்து ஒரு துப்பாக்கி வெடித்தது.

தொடரும்

# கலை நயம்

## உங்களது தேவைக்கு ஏற்ப நயம்பட திட்டமிட்டு சேவை புரிவது CUB.

தாளம் (லயம்), எழில் (நளினம்), உணர்ச்சிகள் (பாவங்கள்) மூன்றும் ஒருங்கிணையும் போது நடனம் கலைநயம் மிக்கதாக அமைகிறது.

ஆடல், பாடல் போன்ற எந்த தொன்மையான கலையாயினும், நயத்தோடு கூடிய பாரம்பரியத்தைப் போற்றும் CUB, வங்கித்துறையிலும் பாரம்பரியமான நயத்தோடும், நாணயத்தோடும் சிறந்த சேவை ஆற்றி வருகிறது.

தொன்மையான வாடிக்கையாளரின் சேவை,
வங்கித் துறையில் சிறந்த அனுபவம்,
வாடிக்கையாளர்களின் முழு நம்பிக்கை ஆகியவையே
CUB யின் நயமான சேவையின் அடிக்கல்கள்.

**CUB அளிக்கும்:**

- சேமிப்புக் கணக்கு
- மாதாந்திர சேமிப்புத் திட்டங்கள்
- வாமன விஸ்வரூப வைப்புத் தொகை
- காலவரை வைப்புத் தொகை
- வெளிநாட்டில் வாழ்வோர் சேமிப்புக் கணக்கு

*நாடுவீர் எம்மை—*
*பெறுவீர் நன்மை!*




CUB

**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**

பதிவு அலுவலகம்: கும்பகோணம்–612 001.

CUB – உங்கள் வளர்ச்சிக்கேற்ற வங்கி.

MCS/CUB/409



* பத்மஸ்ரீ விருது...



* சலிப்புத் தன்மை!

# பாண்டிச்சேரியிலும் ஜெ-இ.காங்கிரஸ் கூட்டணி வென்றுவிட்டால்?

*** எஸ். மாரியப்பன், புதுக்கோட்டை.**

**? 'எம். ஜி. ஆர். வழியில் ஜெயலலிதாவும் சட்டசபை பதிவுப் புத்தகத்தில் கையெழுத்துப் போட்டு நடந்து காட்டுகிறார்' என்று எஸ். டி. எஸ். பாராட்டியுள்ளாரே?**

! அவருக்குப் பாராட்டுவது தவிர வேறு வழியில்லை. ஆனால் நமக்குத் தெரிய வேண்டும், இது சரியல்ல என்று. ஜனநாயகத்தில் அரசியல் சாசனமும், சட்டங்களும் எவ்வளவு முக்கியமோ, அத்தனைக்கு சீரிய மரபுகள் முக்கியமானவை. சிறந்த முன்னுதாரணங்களை அடுத்து வருகிறவர்கள் பின்பற்ற வேண்டுமே தவிர, தவறானவற்றையல்ல. இப்படி நான் கூறுவதால் ஜெயலலிதாவுக்கு இழைக்கப்பட்ட சில கொடுமைகளை நான் நியாயப்படுத்துவதாகாது. நாம் பின்பற்ற வேண்டியது காந்திய நெறிமுறையை. நமக்குத் தவறு இழைத்தவர்கள் மீது கோபப்படாமல் அவரிடமே போய் அவர் மனத்தை நல்வழியில் மாற்ற முயற்சி எடுப்பதுதான் அது.

*** ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்.**

**? உச்சி முதல் பாதம் வரை பார்க்கிறீர்களா?**

! ஆரம்பம் முதல் முடிவு வரை பார்க்க வைக்கும் நிகழ்ச்சி.

*** என். சம்பத், திருச்சி.**

**? என். ராம், அருண் ஷோரி முதலிய பத்திரிகையாளர்களுக்குக் கிடைத்துள்ள பத்மஸ்ரீ விருது பத்திரிகை உலகுக்குக் கிடைத்த வெற்றி தானே?**

! போபர்ஸ் ஊழல் தொடர்பாக கேஸ் பதிவானதும், ஸ்விஸ் அரசு ரகசியக் கணக்குகளை அப்படியே முடக்கி விடுவதில் தந்துள்ள ஒத்துழைப்பும், ராஜீவின் காங்கிரஸ் ஆட்சி பதவி இழந்ததும்தான் பத்திரிகை உலகுக்குக் கிடைத்த வெற்றியே தவிர, இந்த விருதுகள் அல்ல. இந்த விஷயத்தில் நான் நிகில் சக்கரவர்த்தி கட்சி. இந்தப் பத்திரிகையாளர், தமக்கு அளிக்கப்பட்ட பத்மஸ்ரீ விருதைத் திருப்பிக் கொடுத்து விட்டார். 'நடுநிலை வகிக்க வேண்டிய பத்திரிகையாளர்கள் அரசு வழங்கும் விருதுகளைப் பெற்றுக் கொள்வது முறையல்ல' என்று கருதுகிறார். மேலும், கட்சிக் கண்ணோட்டத்துடன் விருதுகள் வழங்கப்படுவதையும் சுட்டிக்காட்டியுள்ளார்.

*** ஏ. ஈஸ்வரன், தேவூர் மேட்டுக்கோட்டை.**

**? திருநாவுக்கரசு சாரின் குரல் சட்டசபையில் கம்மி விட்டது போல் தோன்றுகிறதே?**

! அதற்குக் காரணம் 'ஜெ' சமீபத்தில் நடத்திய மட்டம் தட்டும் நாடகம்தான். ஆனால் சமீபத்திய குமுதம் கணிப்புப்படி ஜெக்கு அடுத்தபடியாக திருநாவுக்கரசுக்குத்தான் மக்களிடம் செல்வாக்கு இருப்பதாகக் காண்கிறதே!

*** வைஜயந்தி, தாராபுரம்.**

**? ஹிந்திச் செய்தி ஒலிபரப்பை வாபஸ் வாங்கிக் கொண்டது பற்றி?**

! ஹிந்தி நிகழ்ச்சிகள் அனைத்தையும் வாபஸ் பெறச் செய்ய இவர்களால் முடியாது. ஆனால் ஹிந்தி எதிர்ப்பில் வெற்றி பெற்றது போலும் காட்டிக் கொள்ள வேண்டும். முழுக்க முழுக்க இருமொழித் திட்டம் என்பதை அவர்களால் ஏற்க முடியாது. ஆனால் ஹிந்தித் திணிப்பு வெறியர்கள் அல்ல என்பது போலும் காட்டிக் கொள்ள வேண்டும். ஆக மொத்தம் ஒரு சின்ன அட்ஜஸ்ட்மெண்ட்.

*** டி. சீனிவாசன், சென்னை — 79.**

**? 'குதிரைப் பந்தயத்தை ஒழிப்பதே அரசுக் கொள்கை' என்று அறிவித்திருக்கிறாரே, கருணாநிதி?**

! அந்தக் குதிரைகளுக்கு முன்னால் பெரிய பெரிய யானைகள் நிற்கின்றன. இவற்றை

வென்ற பிறகுதான் அவற்றை அணுக முடியும். அதுவரை குதிரைப்பந்தய ஒழிப்பு; கொள்கை அளவில்தான்!

* அ. ஜமால் மொய்தீன், செங்குன்றம்.

? சமீபத்தில் தாங்கள் ரசித்த அரசியல் நாடகம்?

! காஷ்மீரில் ஃபாரூக் அமைச்சரவையைக் கலைத்து, கவர்னர் ஆட்சி கொண்டு வந்த பிறகு, மாஜி முதல்வரை ஸ்பெஷல் விமானத்தில் தில்லிக்குத் தருவித்து மத்திய அரசு பேச்சு நடத்தியதுதான்! சில அரசியல் நோக்கர்கள், 'ஃபாரூக்கே மறுபடி அரங்கில் ஏறிவிடுவார்' என்று கூறிக் கொண்டிருப்பது பொய்த்துப் போனால் சரி!

* அ. கிருஷ்ணமூர்த்தி, நரிப்பாளையம்.

? பாண்டிச்சேரியிலும் இ. கா. — அ. இ. அ. தி. மு. க. கூட்டணி வெற்றி பெற்றால் கருணாநிதி நிலை எப்படி இருக்கும்?

! 'உடன்பிறப்பே! அது பாண்டிச்சேரி மக்களின் தீர்ப்பு. அதற்குத் தலைவணங்குவோம். ஏற்றுக் கொள்வோம். ஆனால் அது தமிழகத்தைப் பாதிக்காது' என்பார்.

* ஏ. உமாசங்கர், குடியாத்தம்.*

? படித்த வேலையில்லாத இளைஞர்களுக்கு மாதா மாதம் பணம் தருவதை நிறுத்தி அதைக் கொண்டு தொழிற்சாலை அமைத்து வேலை வாய்ப்பைப் பெருக்கினால் என்ன?

! படித்துவிட்டு வேலையில்லாமல் இருப்பதைவிடக் கொடிய தண்டனை வேறொன்றும் கிடையாது. சின்னச் செலவுக்குக் கூட இன்னொருவரிடம் கையேந்தும் நிலையில் கூசிக் குறுகும் போது உதவித் தொகை பெறுவது சற்றே ஆறுதலாக இருக்கலாம். அதிலும் வேலை வாய்ப்பு என்பதை தேசிய முன்னணி அரசு, அடிப்படை உரிமையாக்கி விட்டால் உதவித்தொகை பெறுவதை இளைஞர்கள் அவமானமாக எண்ண மாட்டார்கள். 'இந்த அரசினால் எனக்கு வேலை பெற்றுத் தர முடியாத போது அதனிடம் உதவித் தொகை பெறுவதில் தவறில்லை' என்றே எண்ணுவார்கள். ஆனால் இவை ஆரோக்கியமான கொள்கையோ, மனப்பான்மையோ அல்ல. உடல் உழைப்பில் தவறில்லை என்ற எண்ணத்தை வளர்க்கிற, சுய வேலை வாய்ப்புக்கு வழிகாட்டுகிற கல்விக் கொள்கை அமல்படுத்தப்பட வேண்டும். வேலை வாய்ப்புக்களை ஏராளமாகப் பெருக்குகிற முறையில் தொழில் — பொருளாதாரக் கொள்கைகள் உருவாகிச் செயல்பட வேண்டும். நாற்பத்து மூன்று ஆண்டுகளாக நடக்கவில்லை. இனிமேலா...?

* ரமா, சென்னை.

? சுப்புடுவுக்குப் பாராட்டு விழா நடத்திருக்கிறதே?

! அவருடைய விண்டல் கலந்த எழுத்தாற்றல்; இசை ஞானம் ஒருபக்கமிருக்க, ஒரு ரசிகன் தனக்குப் பிடித்தமான கச்சேரிக்கு மட்டுமேபோகிறான்; ஒரு விமர்சகன் அப்படியல்ல. பிடித்தது, பிடிக்காதது; பிரமாதமானது, மோசமானது; குத்துக் குட்டிகளின் ஆட்டம், தேர்ந்தவர்களின் நடனம் என்று எல்லாவற்றையும் பார்க்க வேண்டியிருக்கிறது. அந்தச் சகிப்புத் தன்மைக்காகவே பாராட்டலாம்!

* டி. சந்திரன், ஈரோடு.

? தமிழ் நாவல்களில் தமிழ் சொற்களே அரிதாகி விடும் போலிருக்கிறதே?

! யூ ஆர் கரெக்ட். லேட்டஸ்டாக எழுதப்படும் மாடர்ன் நாவல்கள் அத்தகைய திங்கிங்கை கிரியேட் பண்ணுகின்றன. நீ பேட் யார்!

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

ஏ. உமாசங்கர்,
1, அண்ணா நகர்,
பிச்சனூர், குடியாத்தம்,
— 632 601.



* மீண்டும் மேடையில்?



* குரல் கம்மியது



* 'ஜெ'க்குப் பாராட்டு!

# அண்ணாதுரைக்கு ஆதரவும் எதிர்ப்பும்!



* ஸி. என். ஏ: ராஜாஜியின் நம்பிக்கைகளிலும் கவலைகளிலும் இடம் பெற்றவர்.

எண்பத்தெட்டு வயதான ராஜாஜியின் நம்பிக்கைகளிலும் கவலைகளிலும் மிக அதிகமாக இடம் பெற்றவர், ஐம்பத்தெட்டு வயது நிரம்பிய ஸி. என். அண்ணாதுரை. தமிழ்நாட்டின் புதிய முதலமைச்சர். மக்களிடம் பெரும் செல்வாக்குக் கொண்டிருப்பவர்களுக்குப் பொதுவாக சகிப்புத் தன்மை குறைவாகவே இருக்கும். ஆனால் மிகப் பிரபலமான இந்த மனிதர் — சக்தி வாய்ந்த பேச்சாளராகவும் எழுத்தாளராகவும் விளங்கியவர் — சகிப்புத் தன்மை உடையவராக மட்டுமின்றி, எதிர்த்தரப்பு வாதங்களுக்குச் செவி சாய்ப்பவராகவும் விளங்கினார்! பிரிவினைவாதத்தையும் பிராமண எதிர்ப்பையும் கைவிட்டார். ஏற்கெனவே தாம் நம்பி வந்த நாத்திகக் கொள்கையையும் மறுபரிசீலனை செய்யத் தயாரானார். கட்சி மீது அவருக்கு இருந்த பிடிமானம், சட்டசபையில் அவருக்கு இருந்த பெரும்பான்மை, மக்கள் மீது அவருக்கிருந்த செல்வாக்கு எல்லாம் அசைக்க முடியாதபடி உறுதியாக இருந்தன. ஸி. ஆரிடம் அவருக்கு இருந்த நல்லெண்ணமும் நன்மதிப்பும் உண்மையானதாக விளங்கியது. புதுதில்லியிலிருந்தும் காங்கிரஸை வெளியேற்றும் முயற்சியில் சுதந்திரக் கட்சிக்கு அண்ணாதுரையின் துணை பேருதவியாக இருக்கும்.



* மொரார்ஜி: முரட்டு மோதல்.

ஆனால் தி. மு. க. வெற்றி பெற்ற சில நாட்களுக்குள்ளாகவே அந்தக் கட்சியை வேறு பலரும் நேசம் பாராட்டி நெருங்கினார்கள். ஈ. வெ. ரா., தி. மு. க. ஆட்சியைத் தாம் ஆதரிப்பதாகச் சொன்னார். தேர்தலின் போது அவர் காமராஜை ஆதரித்திருந்தார். ஸி. ஆரைப் போலவே கம்யூனிஸ்டுகளும் அண்ணாதுரையை ஆதரிக்கத் தயாராக இருந்தனர். அவரது ஆட்சியைக் குறைகூறி விமர்சிப்பதில் நிதானம் காட்டினர். ஆனால் ஸி. ஆர்., தமக்குத் தவறு என்று தோன்றும் எந்த ஒரு விஷயம் பற்றியும் 'பளிச்' சென்று எழுதி விடுவார், அல்லது வெளிப்படையாகப் பேசி விடுவார்.

உதாரணமாக சுயராஜ்யாவில் அவர் பின்வருமாறு எழுதினார்:

தமிழ்நாடு தனித்தன்மை பெற்று விளங்குகிறது. அதன் இப்போதையத் தலைவர்கள், நாட்டை ஆள்வதில் கவனம் செலுத்துவதை விட, பழக்கத்தில் உள்ள பெயர்களையும் வார்த்தைகளையும் மாற்றுவதில் அதிக நேரத்தையும் சக்தியையும் சிந்தனையையும் செலவழிக்கிறார்கள்! போஸ்ட் ஆபீஸ், போலீஸ் ஸ்டேஷன், செக் போஸ்ட், கார்டு, சைக்கிள் போன்றவற்றுக்குப் புதிய பெயர்கள் சூட்டப்பட்டுள்ளன. ஆனால் இவற்றை உபயோகிப்போர், ஒரு நூற்றாண்டுக்கு மேலாக இங்கே புழங்கி வரும் ஆங்கிலப் பெயர்களையே பயன்படுத்த விரும்பி, கண்டக்டர், டிரைவர், ஸெல்ஃப் ஸ்டார்ட்டர், ரயில்வே ஸ்டேஷன் என்றெல்லாம் தான் குறிப்பிடுகிறார்கள்! (24.8.67)

**மொ**ழிப் பிரச்னையில் ஒற்றுமையும் இருந்தது: வேற்றுமையும் இருந்தது. ஆங்கிலத்தையே நாடு முழுவதற்குமான தொடர்பு மொழியாக நீடிக்கச் செய்வதில் ராஜாஜியும் அண்ணாதுரையும் கருத்து ஒருமித்து இருந்தார்கள். ஆனால் கல்லூரி களிலும் பல்கலைக் கழகங்களிலும் எந்த மொழியில் பாடம் போதிப்பது என்பதில் இருவருக்கும் கருத்து மாறுபாடு இருந்தது. அண்ணா, 'தமிழ்தான் இதற்கு ஏற்றது' என்றார். ஸி.ஆர்., 'ஆங்கிலமே இதற்கு உகந்த மொழி' என்று கருத்துக் கொண் டிருந்தார். மத்தியக் கல்வி அமைச்சர் திரிகுணா ஸென், 'கல்லூரிகளில் போதனா மொழி ஆங்கிலமாக இருக்கக் கூடாது; பிராந்திய மொழிக்கு மாற வேண்டும்' என்று கூறவும், ''பல்கலைக் கழகங்களே! போர்க்கோலம் பூணுங்கள்!'' என்று ஆவேசத்துடன் எழுதினார் ஸி. ஆர். அண்ணாதுரையோ, மறைமுகமாகவும் நேர் முகமாகவும் மத்திய அரசு ஹிந்தியைத் தென்னகம் மீது திணிக்கப் பார்க்கிறது என்பதாகக் கருதி, தமது சினத்தை அந்தத் திக்கில் மட்டுமே திருப்பி விட்டார். ஹிந்தி திணிப்பு முயற்சிக்குப் பதிலடி கொடுப்பது போல் தமிழ் நாட்டின் அரசுப் பள்ளிகளில் ஹிந்தி போதிக்கப்படுவதற்கு முடிவு கட்டி னார். ஹிந்தி போதனை அரசுப் பள்ளி களில் ஆரம்பமானது, ஸி. ஆர். சென்னை ராஜதானியின் பிரதம மந்திரியாக முன்பு (முதல் தடவை) இருந்த போதுதான். இன்று போலவே அன்றும் அதனை அண்ணா எதிர்த்துக் கிளர்ச்சி செய்ய, ஸி. ஆர். தலைமையில் இயங்கிய அரசு, அவரை அன்று கைது செய்திருந்தது. ஆனால் இப்போது சட்டசபையில் இருந்த சுதந்திரக் கட்சி உறுப்பினர்களை அண்ணாவின் ஹிந்தி ஒழிப்பு நடவடிக்கைக்கு ஆதரவு தருமாறு ஸி. ஆர். கேட்டுக் கொண்டார். இந்த ஒழிப்பு நடவடிக்கைக்கு எதிராக ஒரு வோட்டு கூட விழவில்லை! காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் கூட எதிர்த்து வோட்டு அளிக்கவில்லை. அண்ணாவுக்கு இது முழு வெற்றி என்றாலும் ஸி. ஆருக்குச் சிறிதள வேனும் கசப்புணர்வு ஏற்படாமல் போக வில்லை.

**பு**துதில்லியின் ஒப்புதலுடன் தமிழ் நாடு அரசு, வேறு பல மாநில அரசுகளைப் போல் லாட்டரி நடத்தத் தீர்மானித்தது. ஸி.ஆரினால் கோபத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. 'இது ஏழை மக் களிடமிருந்து பணத்தைத் திருடுவதற்கு ஒப்பாகும்' என்று கருதிய அவர், அரசு லாட்டரி நடத்துவது அரசியல் சாசனத் துக்கே முரணானது என்றும் சந்தேகித்தார். அதர்மமானது என்பதில் அவருக்கு எள்ளளவும் சந்தேகமிருக்கவில்லை. ''ஒரு மாநில அரசாங்கம் வருவாய் கருதி தானே லாட்டரி நடத்துமானால், சூதாட்ட நிலை யங்களை நடத்துவோரை வளைத்துப் பிடித்துத் தண்டனைக்காக மாஜிஸ்திரேட்டு கள் முன் நிறுத்த, அந்த அரசுக்கு என்ன தார்மிக உரிமை இருக்க முடியும்?'' என்று கேட்டார் ஸி. ஆர்.



• மாதவன்: தைரியமான எதிர்ப்பு.

அதிர்ஷ்டவசமாக தி.மு.க.வைப் போற்ற வும் அதன் சார்பாக வாதாடவும் சந்தர்ப் பங்கள் ஸி. ஆருக்குக் கிடைத்தன. துணைப் பிரதமர் மொரார்ஜி தேசாய்க்கும் தமிழக சட்ட அமைச்சர் மாதவனுக்கும் இடையில் ஒரு மோதல் ஏற்பட்ட போது ஸி. ஆர். எழுதினார்.

''ஆங்கிலம் பற்றிய பிரச்னையில் தேசாய் முரட்டுத்தனமாக நடந்து கொண்ட போதிலும் தமிழக அமைச்சர் தைரியமாக வும், வெற்றிகரமாகவும் அதனை எதிர்த்து உண்மையின் சார்பில் நின்றிருப்பதை அறிந்து நான் மகிழ்ச்சி அடைகிறேன். 'ஆங்கிலத்துக்குப் பதிலாக ஹிந்தியைத் தொடர்பு மொழியாக ஏற்க முடியாது என் றால் மாதவன் ராஜினாமா செய்து விட லாம்' என்று தேசாய் அவரிடம் கூறியிருக் கிறார்! தேசாய் இன்னும் ஒரு படி மேலே சென்று, 'ஹிந்தியை ஏற்க முடியாது எனில் நீ நாட்டை விட்டு வெளியேற வேண்டும்' என்று கூடக் கூறியிருக்கலாம்! தேசாயின் துரதிர்ஷ்டம், இந்த நாடு இந்தி பேசும் மக்களால் வெற்றி கொள்ளப்படவில்லை. (சுயராஜ்யா 9.9.67)

அண்ணாதுரை ஒரு சமயம், ''நான் ஒரு தவறு செய்யும் போது எந்த ஒரு அதிகாரி அதனைத் தைரியமாகச் சுட்டிக் காட்டு கிறாரோ, அவரே எனது உற்ற நண்பர்'' என்று கூறிய போது,

''சமீப காலத்தில் தமிழக முதலமைச்சர் ஒருவரால் பேசப்பட்ட மிக முக்கியமான சொற்கள்'' என்பதாக அந்த அறிவிப்பைப் போற்றி வரவேற்றார் ராஜாஜி.

இந்த அறிவிப்பை அண்ணாதுரை செய்து ஒரு மாத காலத்தில், அவரது வாயி லிருந்து வயிறு வரை செல்லும் உணவுக் குழலில், ஓரிடத்தில் புற்றுநோய் தோன்றியி ருப்பதை டாக்டர்கள் கண்டறிந்தார்கள்.

(தொடரும்)

தமிழாக்கம்: **கி. ராஜேந்திரன்**

